# அக்டோபர் புரட்சியும்

# தமிழ் இலக்கியமும்

ரகுநாதன்

NCBH

# அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும்

ரகுநாதன்



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்டிரியல் எஸ்டேட்,
சென்னை-600 098.

## ஆசிரியர் குறிப்பு

விரிவான நூலாக எழுத வேண்டிய விஷயம் இது.

எனினும் அத்தகைய நூற்பொருளுக்கான அண்மைக் காலச் சான்றுகள் எந்த அளவுக்கு அதிகமாக உள்ளனவோ, அந்த அளவுக்கு ஆரம்பகாலச் சான்றுகள் மிக மிக அரிதாகவே நமக்குக் கிட்டியுள்ளன. இதன் காரணமாகவே இக் கட்டுரையில் பலரும் அறிந்த அண்மைக்காலச் சான்று களைக் காட்டிலும் பலரும் அறியாத ஆரம்ப காலச் சான்று களே பெரிதும் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன.

இன்னும் புதைபொருளாக இருக்கும் இத்தகைய அரிய சான்றுகள் பலவற்றையும் தேடிக் கண்டறிவதே, இவ் விஷயம் குறித்து விரிவான நூலொன்றை எழுதத் துணை புரியும். எனவே அத்தகைய சான்றுகளையெல்லாம் தேடித் திரட்டி, ஆரம்பகாலந் தொட்டு இந்நாள் வரையில் இவ் விஷயம் குறித்து விரிவாக ஆராயும் முயற்சிகளுக்கு அடி யெடுத்து கொடுக்கும் வகையிலேயே இக் கட்டுரை அமைந் துள்ளது.

ரகுநாதன்

# 1

## பாரதி—"ரஷ்யப் புரட்சியின் குழந்தை"

ஆங்கிலக் கவிஞன் ஷெல்லியை, "பிரெஞ்சுப் புரட்சியின் குழந்தை'' என்றே இலக்கிய விமர்சகர்கள் பலரும் குறிப் பிட்டுள்ளனர். அதேபோல் தமிழகம் தந்த தேசிய மகாகவி யான சுப்ரமண்ய பாரதியையும் 1905-1907-ம் ஆண்டுகளின் ''ரஷ்யப் புரட்சியின் குழந்தை'' என்றே சொல்லிவிடலாம். ஏனெனில் 1905-ம் ஆண்டின் ரஷ்யப் புரட்சியைத் தொடர்ந்து இந்தியாவில் எழுந்த தீவிரவாதத் தேசிய இயக்கத்தின்போதே, பாரதி தேச பக்தி பொங்கித் ததும் பும் கவிதைகளைப் படைத்த தேசிய கவியாகவும், அரசியல் பத்திரிகையாளராகவும் மலர்ச்சியுற்று மணம் பரப்பத் தொடங்கினர். பின்னல் வரப்போகிற வெற்றிகரமான புரட்சிக்கோர் ''ஒத்திகை'' என்று மாமேதை லெனினல் சரியாக வருணிக்கப் பெற்ற இந்தப் புரட்சி, இந்தியா உட் பட பல்வேறு கீழைநாடுகளிலும் தேச விடுதலைப் போராட் டங்களை மடை திறந்த வெள்ளம் போல் பொங்கியெழச் செய்தது. திலகர் போன்ற திறமை வாய்ந்த தலைவர்கள் தொடங்கிவைத்துத் தலைமை தாங்கி நடத்திய இந்தத் தீவிர வாதத் தேசிய இயக்கத்துக்குத் தூண்டுகோலாக விளங்கிய முக்கிய காரணங்களில், இந்தப் புரட்சியும் ஒன்ருகும் என் பது இன்று சரித்திர ஆசிரியர்கள் பலரும் ஒப்புக் கொண் டுள்ள உண்மையாகும்.

அந்நாளில் கனன்று பொங்கும் காளைப் பருவத்தினராக இருந்த பாரதி திலகரைத் தமது அரசியல் தலைவராக ஏற்றுக் கொண்டதோடு, விழித்தெழுந்த நாட்டின் வீறு கொண்ட

கவிஞராகவும் மாறினர். எனவேதான் அன்றைய மிதவாதிகளை ஆதரித்து வந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் தாம் வகித்து வந்த உதவியாசிரியர் வேலையை உதறித் தள்ளி விட்டு, 1906 ஏப்ரல் மாதத்தில் தமது ஆசிரியப் பொறுப்பில் முற்போக்கான அரசியல் வாரப் பத்திரிகை ஒன்றையே பாரதி தொடங்கினர்.

## 1905-ம் ஆண்டு ரஷ்யப் புரட்சியைப் பற்றி

''சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்'' என்ற முப்பெரும் கோஷங்களை தலைப்புப் பக்கத்தில் தாங்கி, சென்னையிலிருந்து வெளிவரத் தொடங்கிய பாரதியின் அரசியல் வாரப்பத்திரிகையான இந்தியா 1906 ஜூன் மாதம் முதல் செப்டம்பர் மாதம்வரை வெளிவந்த இதழ்கள் சில வற்றில், ஏனைய பல விஷயங்களோடு, ரஷ்யப் புரட்சியைப் பற்றி பின்வரும் தலைப்புகளில் பாரதி எழுதிய ஐந்து செய்தி விமர்சனக் குறிப்புக்களையும் தாங்கி வெளிவந்தன:

**—Russia in the Throes of Revolution Again**

ருஷ்யாவில் மறுபடியும் ராஜாங்கப் புரட்சிச் சின்னங்கள் (30-6-1906)

**—Go Ahead, Russia**

ருஷ்யாவின் தீவிர அபிவிருத்தி (7-7-1906)

**Dissolution of the Duma**

ருஷ்யப் பார்லிமெண்டின் கலைவு (28-7-1906)

**—Russian Revolution**

ருஷ்யாவிலே ராஜாங்கப் புரட்சி (1-9-1906)

**—The Death of Trepoff—One Tyrannical Wretch the Less**

'ட்ரேபோவின் மரணம்'—உலகத்துப் பாதகர்களில் ஒருவன் குறைந்து போய் விட்டான். (22-9-1906)

கொந்தளிப்பு மிக்க அந்நாட்களில் ரஷ்யாவில் நிலவிய நிலைமையைக் குறித்துத் தாம் எழுதிய இந்தக் குறிப்புக் களில், ''ருஷ்ய ஜனங்களாகிய ஆடுகள்மீது அரசேற்றும் கடுவாய் அரசனும் அவனது ஓநாய் மந்திரிகளும் நெடுங்கால மாய்த் தரித்திருக்க மாட்டார்கள். இவர்களின் இறுதிக் காலம் வெகு சமீபமாக நெருங்கி விட்டதென்பதற்கு தெளி வான பல சின்னங்கள் தென்படுகின்றன'' என்று ஜாராட்சி யின் வீழ்ச்சியைக் குறித்துத் தன்னம்பிக்கையோடு எழுதிய தோடு மட்டுமல்லாமல், ''சுயாதீனத்தின் பொருட்டும், கொடுங்கோன்மை நாசத்தின் பொருட்டும், நமது ருஷ்யத் தோழர்கள் செய்துவரும் உத்தமமான முயற்சிகள் மீது ஈசன் பேரருள் செலுத்துவாராக'' என்றும் எழுதி, போராடும் ரஷ்ய மக்களுக்குத் தமது பூரண ஆதரவையும் தெரிவித் திருந்தார் பாரதி. இந்தியா பத்திரிகையில் பாரதி எழுதி யுள்ள கட்டுரைகள், குறிப்புகள் முதலியவை அண்மையில் புத்தக வடிவில் (பாரதி தரிசனம் — இளசைமணியன் தொகுப்பு; முதல்பாகம், 1975) வெளிவந்ததன் மூலம் நமக்குக் கிடைத்துள்ள இந்தக் குறிப்புக்களே, 1905-1907 ம் ஆண்டுகளின் ரஷ்யப் புரட்சியைப்பற்றித் தமிழில் நமக்குக் கிட்டக் கூடிய ஆரம்பகாலக் குறிப்புகள் எனலாம்.

இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டாக வேண்டும். அக் காலத்தில் ஓர் அகில உலகக் கண்ணோட்டத்தையும், புரட்சிகரப் போக்கையும் வளர்த்துக் கொண்டிருந்த ஒரு சிலரில், சமுதாய விடுதலையும் பொருளாதார விடுதலையும் கிட்டும்போதுதான் அரசியல் விடுதலை அர்த்த புஷ்டியும் பூரணத்துவமும் பொருந்தியதாக இருக்கும் என்று கருதிய சிலரில், பாரதியும் ஒருவர். இத்தகைய உணர்வினாலும், ரஷ்யப் புரட்சியிலிருந்து அவர் பெற்ற உத்வேகத்தின் பயனாகவும்தான், ரஷ்யப் புரட்சி நிகழ்ந்த காலத்திலேயே (1907ல்) தாம் எழுதி வெளியிட்ட ''சுதந்திரப் பள்ளு'' பாடலில் பாரதி பின்வருமாறு பாடினார்:

எங்கும் சுதந்திரம்
என்பதே பேச்சு! — நாம்

எல்லோரும் சமமென்பது
உறுதியாச்சு !
சங்கு கொண்டே வெற்றி
ஊதுவோமே ! — இதைத்
தரணிக்கெல்லாம் எடுத்து
ஓதுவோமே!

உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்—வீணில்
உண்டு களித்திருப்போரை
நிந்தனை செய்வோம்!
விழலுக்கு நீர்பாய்ச்சி
மாய மாட்டோம்—வெறும்
வீணருக்கு உழைத்துடலம்
ஓய மாட்டோம்!
ஆடுவோமே—பள்ளுப்
பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம்
அடைந்து விட்டோமென்று
(ஆடுவோமே)

என்றாலும், அன்னிய ஆட்சியாளர்களையும் அவர்தம் காலனியாதிக்கச் சுரண்டற் கொள்ளையையும் சாடி எரிமலை யெனக் குமுறி நெருப்பைக் கக்கி வந்த பாரதியின் இந்தியா பத்திரிகையின்மீது விரைவிலேயே, 1908 செப்டம்பர் மாதத்திலேயே, அன்றைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கழுகுக்கண்கள் பாய்ந்து விட்டன. அரசாங்கம் தம்மைக் கைது செய்யப் போகிறது என்ற ரகசியத்தைத் தெரிந்து கொண்ட பாரதி, தமது சகாக்கள் சிலரோடு அந்நாளில் பிரெஞ்சு நாட்டின் ஆட்சியின் கீழிருந்த பாண்டிச்சேரிக்கு உடனே போய் விட்டார். இந்தியா வாரப் பத்திரிகையையும் அங்கிருந்து தொடர்ந்து வெளியிட்டு வரத் தொடங்கினார். இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும்: பாரதி யோடு பாண்டிச்சேரி சென்ற அவரது சகாக்களில், இந்தியா

பத்திரிகையின் பதிப்பாளரும் நிர்வாகியுமான எம். பி. திருமலாச்சார்யா (மண்டயம் பிரதிவாதி பயங்கர திருமலாச்சார்யா) என்ற இளைஞரும் ஒருவர். எம். பி. டி. ஆச்சார்யா என்று பின்னர் குறிப்பிடப்பெற்ற இந்த இளைஞர் பாண்டிச்சேரியிலிருந்து விரைவிலேயே ஐரோப்பா சென்று அங்கிருந்த இந்தியப் புரட்சியாளர்களோடு சேர்ந்து கொண்டார். எம். பி. டி. ஆச்சார்யா 1919 மே மாதத்தில் லெனினைச் சந்தித்துப் பேசிய இந்தியப் புரட்சிவாதிகளில் ஒருவராகவும், வெளிநாடுகளில் இருந்து வந்த இந்தியப் புரட்சிவாதிகள் 1920 அக்டோபரில் தாஷ்கண்டு நகரில் தோற்றுவித்த இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சிக்குத் தலைவராகவும் இருந்தார் என்றால் அதில் வியப்பேதும் இல்லை.

பாரதி கிட்டத்தட்ட பத்தாண்டுக் காலம் பாண்டிச்சேரியில் அரசியல் அஞ்ஞாத வாசம் புரிய நேர்ந்தது. எனினும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இரும்புக்கரம் அவரது இந்தியா பத்திரிகையின்மீது விரைவிலேயே பாய்ந்தது. இந்தியா தமிழ் நாட்டுக்குள் வருவது தடைசெய்யப்பட்டது. எனினும் பாரதி அதைக்கண்டு சளைக்காமல், தமது கருத்துக்களைப் பிற பத்திரிகைகளின் மூலம் வெளியிட்டே வந்தார்.

## பிப்ரவரிப் புரட்சியின்போது

சர்வதேச நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித்து வந்த பாரதி, ரஷ்யாவில் நிகழ்ந்து வந்த சம்பவங்களையும் தொடர்ந்து கவனித்து வந்தார். எனவே ரஷ்யாவில் 1917ம் ஆண்டின் பிப்ரவரிப் புரட்சி வெற்றி பெற்றபின், விரைவிலேயே 28. 3. 1917 அன்று தாம் எழுதிய "பொழுது போக்கு" என்ற உரையாடற் கட்டுரையில், "பூமியில் நல்ல யுகம் தோன்றப் போகிறது. மனிதஜாதி முழுமைக்கும் விடுதலையுண்டாகப் போகிறது. ருஷ்ய ராஜ்யப் புரட்சியானது இனி வரப்போகிற நற்காலத்தின் முன்னடையாளங்களில் ஒன்று" என்று எழுதினார் பாரதி. (பாரதி தமிழ்—பெ. தூரன் தொகுப்பு). ஏறத்தாழ இதே சமயத்தில்

''வரப்போகும் யுகம்'' (The Coming Age) என்ற தலைப்பில் தாம் எழுதிய ஆங்கிலக் கட்டுரையில், பாரதி பின்வருமாறு எழுதியுள்ளார்:

''சோஷலிசம் என்று மேலை நாட்டினர் குறிப்பிடுவது என்னவென்று இங்கு தெளிவாகப் புரிந்து கொள்ளப்படவில்லை. என்றாலும் மேலை நாட்டுக்கும் சரி, கீழை நாட்டுக்கும் சரி, கௌரவமான வாழ்க்கை நடத்துவதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் உள்ளது. உலகைப் பொதுவுடமையாக்கி, அதில் சக-தொழிலாளிகளாகவும் கூட்டுப் பங்காளிகளாகவும் வாழ்வதே அந்த மார்க்கமாகும். கிருதயுகத்தில் மனிதர்கள் இம்மாதிரியே இந்த நாட்டில் வாழ்ந்தனர் என்று கூறும் மரபு நமக்குண்டு. அது உண்மையாகவும் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். ஆயினும், எல்லா நாடுகளிலும், அதுவும் விரைவிலேயே, கிருதயுகத்தைக் கொண்டு வருவதில், மானிட வைராக்கியம் இனியும் வெற்றி பெறும். மனிதனின் மிகவுயர்ந்த வைராக்கியம் இதுவரையில் ஏதோ காரணத்தினால் முடக்கப் பட்டிருந்தது; அது தனது சக்தியின் தலையாய அம்சத்தை, நமது சமுதாயப் புன்மைகள் அனைத்தின் வேரையும் களையும் பணியில் செலுத்த முடியாமல் இருந்தது. மனித சமுதாயத்தின் உருவாக்கத்திலேயே நீதியை வெற்றிபெறச் செய்தாக வேண்டும். பின் நீதி எல்லா மானிட விவகாரங்களிலும் உறவுகளிலும் இயல்பாகவே வெற்றி பெற்றுவிடும். மனிதக் கூட்டுறவுகளின் கட்டுக்கோப்பில், போட்டிக் கோட்பாடு கொடிகட்டிப் பறக்கிற வரையிலும், நிலமும் நீரும் மனிதர்கள் எல்லோருக்கும் பொதுவான சொத்தாக இல்லாத வரையிலும், எந்த விதத்திலும் மனிதர்கள் தமது 'பொருளாதார' உறவுகளில் மிருகங்களை விடவும் மோசமாகவே நடந்து கொள்வர்...இந்த உண்மையைப் பெரும்பான்மையான மனிதர்கள் பூரணமாக உணரும் போது, நாம் நமது ஏறுமுகமான பரிணாமத்தில் அடுத்த அடியை எடுத்து வைத்து விடுவோம் (Bharathi's "Essays and other Prose Fragments").

# 2

## மாபெரும் அக்டோபர் புரட்சியும், அதன் பிறகும்

எனவேதான் 1917 ஆம் ஆண்டின் மாபெரும் அக்டோபர் புரட்சி வெற்றி பெற்றவுடனேயே, பலமொழி பேசும் பாரத நாட்டைச் சேர்ந்த கவிஞர்கள் அனைவரிலும், அப் புரட்சியை முதன் முதலில் வாழ்த்தி வரவேற்றுப் பாடிய கவிஞராகத் திகழ்ந்தார் பாரதி. 'புதிய ருஷ்யா' என்ற தமது அற்புதமான அமரகவிதையில், அவர் அந்தப் புரட்சியை இவ்வாறு வாழ்த்தினார்:

குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு
மேன்மையுறக் குடிமை நீதி
கடியொன்றில் எழுந்தது பார்; குடியரசென்று
உலகறியக் கூறி விட்டார்.
அடிமைக்குத் தளையில்லை, யாரும் இப்போது
அடிமையில்லை அறிக என்றார்.
இடிபட்ட சுவர்போல கலிவிழுந்தான்,
கிருத யுகம் எழுக மாதோ!

இதே கவிதையின் தொடக்கத்தில், அவர் அந்தப் புரட்சியை "ஆகா வென்று எழுந்தது பார் யுகப் புரட்சி" என்று கூறி, "வையகத்தீர், புதுமை காணீர்" என்று உலகினரையும் அறைகூவி அழைத்து அதனைக் காணுமாறு கூறினார். எனவே அவர் மனிதகுலத்துக்கு ஒரு புதிய யுகத்தைக் கொண்டு வந்த அந்தப் புரட்சியின் உலக முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்திருந்தார் என்பது தெளிவு.

எனினும், பாரதியின் கவிதைகள் வெளிவந்ததைக் குறித்து நமக்குக் கிடைத்துள்ள தகவல்களையெல்லாம் கொண்டு பார்க்கும் போது, அக்டோபர் புரட்சியைப் பற்றிய பாரதியின் இந்த அமர கவிதை அந்நாளில் பிரிட்டிஷ்

இந்தியாவில் பிரசுரமானதாகத் தெரியவில்லை. அது பிரெஞ்சு இந்தியாவில், பாண்டிச்சேரியில்தான் வெளிவந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. முதல் உலக யுத்த காலத் தின் போது பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் இங்கு விதித்திருந்த கடுமையான தணிக்கை விதிகளும், பிரிட்டிஷ் இந்தியாவில் அப்போது அமலிலிருந்து வந்த பத்திரிகைச் சட்டமும்தான் இதற்கான காரணங்களாகும். என்றாலும் பாரதி அக்டோபர் புரட்சியின் செய்தியையும், அதன் தலைவரான லெனினது சாதனையையும், உருவகக் கவிதை வடிவத்தைப் பயன்படுத்தி, மறைமுகமான முறையில், பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த வாசகர்களுக்குத் தெரிவிக்கவே செய்தார். பாரதி தமது கவிதைகள் எதிலுமே லெனினைப் பெயர் சொல்லி நேர்முக மாகக் குறிப்பிடவில்லை என்பது உண்மையே. எனினும், 'காலைப் பொழுது' என்ற தலைப்பில் அவர் பாடியுள்ள தனிப் பாடல், லெனினையும், அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் ரஷ்யாவில் உதயமான புதிய சமுதாயத்தையும்தான் குறிப் பிடுகிறது என்பது இப்போது உறுதியாகியுள்ளது.

அப்போது காக்கை, ''அருமையுள்ள தோழர்களே!
செப்புவேன் கேளீர், சிலநாளாக் காக்கையுள்ளே
நேர்ந்த புதுமைகளை நீர்கேட் டறியீரோ?
சார்ந்துநின்ற கூட்டமங்கு சாலையின்மேற் கண்டீரே!
மற்றந்தக் கூட்டத்து மன்னவனைக் காணீரே!
கற்றறிந்த ஞானி கடவுளையே நேராவான்;
ஏழுநாள் முன்னே இறைமகுடம் தான்புனைந்தான்;
வாழியவன் எங்கள் வருத்தமெலாம் போக்கிவிட்டான்.
சோற்றுக்குப் பஞ்சமில்லை; போரில்லை; துன்பமில்லை;
போற்றற் குரியான் புதுமன்னன், காணீரோ?''

என்றும், பிறவாறும் இந்தப்பாடலில் பாரதி பாடியுள்ளவை, அக்டோபர் புரட்சியையும், அதன் தலைவரான லெனினை யுமே குறிக்கிறது என்ற புதிய உண்மையைப் பேராசிரியர் தா. செல்வப்பா அண்மையில் கண்டறிந்து கூறியிருக்கிறார். (தாமரை, டிசம் 76). பாரதி குறிப்பிட்டுள்ள ''புதுமை'' அக்டோபர் புரட்சிதான் என்பதும், ''கற்றறிந்த ஞானி''

என்பவர் லெனினேதான் என்பதும் அவரது கருத்து. உண்மையில் பாரதியின் வசனப் பகுதியில் காணப்படும் 'காக்காய்ப் பார்லிமெண்ட்' என்ற உருவகக் கட்டுரையும் இதே பாணியில் இருப்பதும், அதிலும் ரஷ்ய நாட்டின் அரசியல் நிலைமை பற்றிக் காக்கைகள் பேசிக்கொள்வதாகப் பாரதி எழுதியிருப்பதும், பேராசிரியர் செல்லப்பாவின் கருத்தை ஊர்ஜிதம் செய்ய நமக்கு உதவும் துணைச்சான்றாக விளங்குகிறது. இது உண்மையானால், பாரதி அக்டோபர் புரட்சி வெற்றி பெற்ற தருணத்திலேயே, அதாவது ஒருவார காலத்திலேயே (''ஏழு நாள் முன்னே'') லெனினைக் குறித்தும் மறைமுகமாகப் பாடியுள்ளார் என்றே கொள்ளலாம்.

## லெனின் பற்றிய நேர்முகக் குறிப்புகள்

என்றாலும், அந்நாட்களில் பாரதி சுதேசமித்திரன் தினசரியில் எழுதிவந்த பல செய்தி விமர்சனக் கட்டுரைகளில் அக்டோபர் புரட்சியின் சாதனைகளையும் லெனினது சாதனைகளையும் குறித்து நேர்முகமாகவே விதந்தோதி எழுதியுள்ளார். உதாரணமாக, அக்டோபர் புரட்சி வெற்றி பெற்ற சில நாட்களில், 29-11-1917 அன்றே தாம் எழுதிய செல்வம் என்ற கட்டுரையை, பாரதி இவ்வாறு தொடங்குகிறார்: ''ருஷ்யாவில் சோஷலிஸ்ட் கட்சியார் ஏறக்குறைய தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றி விடக் கூடுமென்று தோன்றுகிறது.'' இதன் பின் சோஷலிசம் என்றால் என்ன என்பதை அவர் விளக்கிவிட்டு, ரஷ்யாவைப் பற்றித் திரும்பவும் குறிப்பிடும் போது, ''இக்கொள்கை மேன்மேலும் பலமடைந்து வருகிறது. ஏற்கெனவே ருஷ்யாவில் ஸ்ரீமான் லெனின்..முதலியவர்களின் அதிகாரத்தின்கீழ் ஏற்பட்டிருக்கும் குடியரசில் தேசத்து விளைநிலமும் பிற செல்வங்களும் தேசத்தில் பிறந்த அத்தனை ஜனங்களுக்கும் பொது உடைமையாகி விட்டது..ருஷ்யாவிலிருந்து இது (இக்கொள்கை) ஆசியாவிலும் தாண்டி விட்டது'' என்று எழுதுகிறார். மேலும், ''இந்த ஸித்தாந்தம் பரிபூரண ஜெயமடைந்து மனிதருக்குள்ளே ஸகஜ தர்மமாக ஏற்பட்ட பிறகு

தான் மானிடர் உண்மையான நாகரிகம் உடையோராவர்'' என்றும் பாரதி திட நம்பிக்கை தெரிவிக்கிறார். லெனினைப் பற்றி பாரதி குறிப்பிடும்போது, 'ஸ்ரீமான்' என்ற அடைமொழியைச் சேர்த்துக் குறிப்பிடுவதிலிருந்தே, அவர் லெனினை எத்தனை உயர்வாக மதித்துப் போற்றி வந்தார் என்பதைப் புரிந்து கொள்ளலாம் (பாரதி கட்டுரைகள்—சமூகம்).

ரஷ்யாவில் உள்நாட்டுப் போர் வெடித்ததோடு, இளம் சோவியத் குடியரசைப் பதினான்கு அன்னிய நாடுகளின் ஆயுதந் தாங்கிய தலையீட்டுப் போரும் அச்சுறுத்திய காலத்தில், பாரதி அதனை அறிந்து பெரிதும் மனம் கலங்கினார்; அந்தக் கவலை அவரை இரவிலும் தூங்க விடவில்லை. ரஷ்யாவில் உள்நாட்டு எதிர்ப் புரட்சிக் கொள்ளைக் கூட்டமும் அன்னியத் தலையீட்டாளர்களும் புரிந்து வந்த ரத்த பயங்கரமான அக்கிரமங்களைப் பற்றிக் கூறும் "பேய்க் கூட்டம்'' என்ற தமது கதையில், "ருஷியா விஷயம் எக்கேடு கேட்டால் எனக்கென்ன என்று தூங்க முயற்சி செய்தால் மனம் இணங்கவில்லை...பிறகு எனக்கு ருஷியக் குடியரசின் தலைவனாகிய லெனின் என்பவனுடைய ஞாபகம் வந்தது. உரலுக்கு ஒரு பக்கம் இடி; மத்தளத்துக்கு இரண்டு பக்கம் இடி. லெனினுக்கு லக்ஷம் பக்கத்திலே!'' (பாரதி-கதைகள்) என்று லெனின்மீது பூரணப் பரிவும் பாசமும் கொண்டவராக எழுதினார் பாரதி.

புரட்சிக்குப் பின்னரும் ரஷ்யாவில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிகளை பாரதி உன்னிப்பாகக் கவனித்து வந்தார் என்றே சொல்லலாம். லெனினது தலைமையில் அங்கு நிறைவேற்றப்பட்ட பல சீர்திருத்தங்களையும் பாரதி ஆதரித்து எழுதியுள்ளார். அதே சமயம் அந்த இளம் சோவியத் குடியரசின் மீதும், அது மேற்கொண்ட தீவிரமான நடவடிக்கைகளின் மீதும் புழுதியை வாரித் தூற்றி வந்த மேலை நாட்டுப் பத்திரிகைகளின் விஷமத்தனமான பொய்ப் பிரசாரத்தை மறுக்கவும் அம்பலப் படுத்தவும் பாரதி தவறவில்லை. அவரது கட்டுரைகள் பலவும் இதற்குச் சான்று பகர்

கின்றன. உதாரணமாக, ''நவீன ருஷ்யாவில் விவாக விதிகள்'' என்ற கட்டுரையில் அவர் இவ்வாறு எழுதினார்: ''போல்ஷிவிக் ஆட்சி ஏற்பட்ட காலத்திலே அதற்குப் பல வகைகளிலும் தோஷங்கள் கற்பிப்பதையே தம் உடைமையாகக் கருதிய சிலர்,.....போல்ஷ்விஸ்ட் கட்சியார் ஸ்திரீகளையும் பொது வாகக் கொண்டு ஒருத்தியைப் பலர் அனுபவிக்கிறார்களென்ற அபாண்டமான பழியைச் சுமத்தினர். ஆனால் கெட்டிக் காரன் புளுகு எட்டு நாளைக்கு! ஒன்பதாம் நாள் உண்மை எப்படியேனும் வெளிப்பட்டு விடும். ஒரு பெரிய ராஜ்யத் தைப் பற்றிய எத்தனை காலம் பொய்யைப் பரப்பிக் கொண் டிருக்க முடியும்?'' (பாரதி—கட்டுரைகள்).

## பாரதி பாடல்களில் அக்டோபர் புரட்சியின் செல்வாக்கு

அக்டோபர் புரட்சியின் செல்வாக்கும் அதன் கருத்துக் களும் பாரதி இதன்பின் எழுதிய சில பாடல்களில் பிரதி பலித்துள்ளன. உதாரணமாக, ''முரசு'' என்ற தலைப்பில், அக்டோபர் புரட்சி வெற்றிபெற்ற தருணத்தில், 1917 நவம்பரில் எழுதிய பாட்டில் (இது முதன் முதலாக, பரலி சு. நெல்லையப்பரால் பிங்கள ஆண்டில் ஐப்பசி மாதத்தில் தனிநூலாகப் பிரசுரம் ஆகியுள்ளது), பாரதி இவ்வாறு பாடுகிறார்:

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
வாழும் மனிதரெல் லோர்க்கும்;
பயிற்றி உழுதுண்டு வாழ்வீர்—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம்

அறிவை வளர்த்திட வேண்டும்—மக்கள்
அத்தனை பேருக்கும் ஒன்றாய்;
சிறியரை மேம்படச் செய்தால்—பின்பு
தெய்வம் எல்லோரையும் வாழ்த்தும்.

பாருக்குள்ளே சமத்தன்மை—தொடர்
பற்றும் சகோதரத் தன்மை
யாருக்கும் தீமை செய்யாது—புவி
எங்கும் விடுதலை செய்யும்.

வயிற்றுக்குச் சோறிட வேண்டும்—இங்கு
வாழும் மனிதருக் கெல்லாம்;
பயிற்றிப் பலகல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்.

இதே போல் 'விடுதலை' என்ற பாட்டிலும் அவர் இவ்வாறு பாடியுள்ளார்:

*விடுதலை! விடுதலை! விடுதலை!*

பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை;
பரவரோடு குறவ ருக்கும்
மறவருக்கும் விடுதலை;
திறமை கொண்ட தீமை யற்ற
தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானம் எய்தி
வாழ்வம் இந்த நாட்டிலே (விடுதலை)

ஏழையென்றும் அடிமை யென்றும்
எவனும் இல்லை ஜாதியில்;
இழிவு கொண்ட மனித ரென்பது
இந்தி யாவில் இல்லையே;
வாழி கல்வி செல்வம் எய்தி
மன மகிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒரு நிகர்ச
மான மாக வாழ்வமே (விடுதலை)

மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்து வோம்;
வைய வாழ்வு தன்னில் எந்த
வகையினும் நமக் குளே

தாதர் என்ற நிலைமை மாறி
ஆண்களோடு பெண்களும்
சரிநி கர்ச மானமாக
வாழ்வம் இந்த நாட்டிலே (விடுதலை)

எல்லாவற்றுக்கும் மேலாக, 1921 செப்டம்பர் மாதத்தில் பாரதி காலமாவதற்கு முன்னர் அவர் எழுதிய கடைசிக் கவிதை எனக் கருதப்படும் 'பாரத சமுதாயம்' என்ற அற்புதமான கவிதையில், அவர் இந்தியாவிலும் சோஷலிச சமுதாயம் மலரவேண்டும் என்ற தாகத்தோடும் வேகத்தோடும் பின்வருமாறு பாடிவைத்துச் சென்றிருக்கிறார்:

பாரத சமுதாயம் வாழ்கவே—வாழ்க வாழ்க!
பாரத சமுதாயம் வாழ்கவே

முப்பது கோடி ஜனங்களின் சங்கம்
முழுமைக்கும் பொதுவுடைமை
ஒப்பி லாத சமுதாயம்
உலகத்துக் கொரு புதுமை—வாழ்க

மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனியுண்டோ?
மனிதர் நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை இனியுண்டோ?......

இனியொரு விதி செய்வோம்—அதை
எந்த நாளும் காப்போம்;
தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்....

எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்திய மக்கள்;
எல்லாரும் ஓர்நிறை; எல்லாரும் ஓர் விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்......

இவ்வாறு பாரதியின் பல கவிதைகளின் மூலமாகவும் வசனப் பகுதிகள் மூலமாகவும், 1917-ம் ஆண்டின் அக்டோபர் புரட்சியின் ஆழமான சரித்திர முக்கியத்துவத்தை

இந்தியாவில் முதன் முதலில் உணர்ந்து கொண்டவர்களில் பாரதியும் ஒருவராக விளங்கினுர் என்பதையும், மேலும் அதன் பெரும் செல்வாக்குக்கு அவரும் ஆட்பட்டிருந்தார் என்பதையும் நாம் புரிந்து கொள்கிறேம்.

# 3

## 1920 ஆம் ஆண்டுகளில்

மகாகவி பாரதியின் எழுத்துக்களைத் தவிர, பாரதி பாண்டிச்சேரியில் அரசியல் அஞ்ஞாத வாசம் புரிவதற்கு முன்பும் பின்பும் அவர் உதவியாசிரியராக வேலை பார்த்து வந்த மிகப் பழமையான தமிழ்த் தினசரியான சுதேசமித்திரன் பத்திரிகையும், அக்டோபர் புரட்சியின் வெற்றிக்குப் பின்னர் இளம் சோவியத் குடியரசில் நிகழ்ந்து வந்த சம்பவங்களைக் குறித்து, தானும் பல கட்டுரைகளை வெளியிட்டதோடு வெளிநாட்டுப் பத்திரிகைகளில் வெளிவந்த கட்டுரைகளின் தமிழாக்கத்தையும் அந்நாளில் வெளியிட்டு வந்தது. நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளைக் கொண்டு பார்த்தால், சுதேசமித்திரன் ஒருபுறத்தில் மேலை நாட்டுப் பத்திரிகைகளும் செய்தி ஸ்தாபனங்களும் இளம் சோவியத் குடியரசைப் பற்றிப் பரப்பி வந்த பல்வேறு கட்டுக் கதைகளையும் பொய்ப் பிரசாரத்தையும் கண்டித்தும் அம்பலப் படுத்தியும் வந்ததோடு, மறுபுறத்தில் சோவியத் நாட்டில் நிகழ்ந்து வந்தவற்றைப் பற்றிய உண்மைகளை உள்ளவாறே எடுத்துக் கூறிய கட்டுரைகளை அயல்நாட்டுப் பத்திரிகைகளிலிருந்து எடுத்து வெளியிட்டும் வந்தது என்பதை நாம் புரிந்து கொள்கிறேம். உதாரணமாக, இளம் சோவியத் குடியரசைப் பற்றி இங்கிலாந்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்த நியூ ஸ்டேட்ஸ்மென் என்ற பிரிட்டிஷ் பத்திரிகை

செய்து வந்த தவறான பிரசாரத்துக்குப் பதில் அளிக்கும் விதத்தில் சுதேசமித்திரன் தனது 13.12.1919 தேதியிட்ட இதழில், அக்டோபர் புரட்சியை நேரில் கண்ணாரக் கண்டவரும், "உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்" என்ற தலைப்பில் அந்தப் புரட்சியைப் பற்றிய அற்புதமான நூலை எழுதியவருமான பிரபல அமெரிக்கப் பத்திரிகையாளர் ஜான் ரீட், 12.10.1918 தேதியிட்ட அமெரிக்க லிபரேட்டர் பத்திரிகையில் எழுதியிருந்த கட்டுரையில் கண்டிருந்த விஷயங்களை மேற்கோள் காட்டி ஒரு குறிப்பை எழுதியுள்ளது. அதில், ஜான் ரீட் ரஷ்யாவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நேரில் கண்டு தெரிவித்துள்ள விவரங்களைப் பார்த்தால், மேலைநாட்டுப் பத்திரிகைகள் சொல்லி வந்த கருத்துக்களுக்கு மாறாக, போல்ஷிவிக்குகள் "பெரும்பாலும் ருஷ்ய மகா ஜனங்களின் சம்மதத்தைப் பின்பலமாகக் கொண்டு" ஆட்சி புரிந்து வருவதாகத் தெரியவருவதைக் குறிப்பிட்டு, "லிபரேட்டர் பத்திரிகையில் ஜான் ரீட் எழுதியிருப்பதைப் பார்த்தால், அமித வாதிகள் (போல்ஷிவிக்குகள்-ஆ-ர்) ஆட்சி முறை அவ்வளவு மோசமாக இருக்கவில்லை என்றும், கூடிய வரையில் ஒழுங்காகவும், அநேகமாக முன்னையிலும் நேர்மையாகவும் இருக்கிறதென்றும் சொல்லாமலிருக்க முடியவில்லை" என்று எழுதியுள்ளது. (தமிழகம் கண்ட லெனின்— தொகுப்பு: சி. எஸ்; கே. எம்.) எல்லாவற்றுக்கும் மேலாக 3.5.1917 அன்று சுதேசமித்திரன் "ருஷ்யாவின் பிரஸிடெண்டு மிஸ்டர் லெனின் குணநிசயங்கள்" என்ற கட்டுரையை அந்த இதழின் முதல் பக்கத்தில் வெளியிட்டிருந்தது. தமிழில் லெனினையும் அவரது வாழ்க்கையையும் பணியையும் பற்றி முதன்முதலில் பிரசுரமான முழுநீளக் கட்டுரை இதுவே எனக் கூறலாம்.

சுதேசமித்திரன் இதன் பின்னரும் ரஷ்யாவைப் பற்றிப் பல குறிப்புக்களை வெளியிட்டு வந்தது. சோவியத் நாட்டில் மத நம்பிக்கை உள்ளவர்களையும், மத குருக்களையும் சோவியத் அரசு கொடுமைப் படுத்தி வந்ததாக மேலை நாட்டுப் பத்திரிகைகள் பரப்பிவந்த அவதூறுப் பிரசாரத்துக்குப் பதிலாக,

சுதேசமித்திரன் தனது 10.4.1923 தேதியிட்ட இதழில் ஒரு தலையங்கமே எழுதியிருந்தது. அதில் எழுதியிருந்தாவது:

''ருஷ்யா தேசத்தில் ஐந்து வருஷ காலமாக அதிகாரம் நடத்திவரும் போல்ஷிவிக்கர்கள் ஜனநாயகக் கொள்கைகளிலும், பொருளுரிமைக் கொள்கைகளிலும் வெகு உயர்ந்த நோக்கங்களைக் கொண்டவர்கள். ஐரோப்பாவிலுள்ள மற்ற வல்லரசுகளெல்லாம், பெரும் முதலாளிகளின் செல்வாக்கிற்கு உட்பட்டிருக்கின்றனர். ஐரோப்பாவில் மற்ற தேசங்களில் வெளியாகும் பத்திரிகைகள் விசேஷமாக முதலாளிகளுக்கு உட்பட்டதாக இருக்கின்றன. ஆனதால் அந்தப் பத்திரிகைகளில் ருஷ்யாவைப் பற்றி வரும் விஷயங்களெல்லாம் பாரபட்சமில்லாமல் எழுதப்பட்டனவென்று கொள்ள முடியாது. ருஷ்யா தேச மகா ஜனங்களோ போல்ஷிவிக்கர்களையே ஆதரித்து வந்திருக்கிறார்கள். இவ்விதம் ஐந்து வருஷ காலத்திற்கு மேலாகவே தேச மகா ஜனங்களுடைய நன்னம்பிக்கையைக் கவரக் கூடியவர்களை துர்க்குணம் நிரம்பியவர்கள் என்று கருதக்காரணம் ஒன்றுமே இல்லை.''

இவ்வாறு எழுதிவிட்டு, போல்ஷிவிக்குகளுக்கு எதிராகக் கூறப்பட்ட பொய்ப் பிரசாரத்துக்குப் பதிலளிக்கும் முகமாக, சுதேசமித்திரன் அதே தலையங்கத்தின் இறுதியில் பின்வருமாறு எழுதியிருந்தது:

''அவர்கள் தத்துவம் சமத்துவம் சகோதரபாவம் இவைகளைத் தழுவியதாகவே இருக்கிறதென்று நினைக்க இடமிருக்கிறது. போல்ஷிவிக்கர்களுடைய பொருளுரிமைக் கொள்கைகள் தற்காலத்திய பெரிய முதலாளிகள் சிலருக்கு அல்லது பலருக்கு வேம்பாக இருக்கலாம். ஆனால் பசியால் ஆயிரக் கணக்கான ஜனங்கள் மடியும்போது மட்டுக்கு மிஞ்சிய பணம் படைத்த ஒரு சிலர் தங்கள் மடிநாய்களுக்குப் பாலும் தெளிதேனும் கலந்து விருந்திடும் கோரத்தை மாற்றி, எல்லாரும் பசியாற உண்ணக் கூடிய வழிகளைக் கண்டுபிடிக்க முயல்வது மேலான முயற்சி என்பதை எவரும் மறுக்க முடியாது. மத குருமார்கள் உபதேசிக்கும் சடங்கு நுட்பங்களைக் காட்டிலும், போல்ஷிவிக்கர்கள் பெரு முயற்சியே

இல்லார்க்கும் உள்ளார்க்கும் ஒரு பொதுவான கடவுளின் உண்மை மதத்தை அனுசரித்திருக்கிறது'' (தமிழகம் கண்ட லெனின்).

## நீலகண்ட பிரம்மச்சாரி

**1905**ம் ஆண்டின் முதல் ரஷ்யப் புரட்சியின் காலந் தொட்டே, தீவிரத் தேசிய வாத இயக்கம் தமிழ் நாட்டிலும் மும்முரமாகவே இருந்தது. மேலும் புரட்சி மனப்பான்மை கொண்ட அந்நாளைய இளம் தேச பக்தர்கள் பலர் அந்தப் புரட்சியைப் பற்றி அறிந்து கொள்வதில் மட்டுமல்லாது, ரஷ்யப் புரட்சியாளர்கள் தமது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளக் கையாண்ட முறைகளையும் தெரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டினர். என்றாலும் குறிப்பாக பத்தொன்பதாம் நூற்றாண்டின் நரோத்னிக்குகளைப் பின்பற்றி வந்த சமூகப் புரட்சிவாதிகளின் நடவடிக்கைகளைப் பற்றிய புத்தகங்கள் முதலியவற்றையே அந்த இளைஞர்கள் அச்சமயத்தில் பெற முடிந்தது. அத்தகைய இலக்கியங்களை, இந்தியப் புரட்சி வாதிகள் மிகவும் மும்முரமாகச் செயல்பட்டு வந்த வங்காளத்திலிருந்தோ அல்லது ஐரோப்பாவிலிருந்த இந்தியப் புரட்சி வாதிகளிடமிருந்து, அப்போது பிரெஞ்சு ஆட்சியின் கீழிருந்த பாண்டிச்சேரியின் வழியாகவோதான் அவர்கள் பெற்று வந்தனர். பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தின் அதிகார பூர்வமான ரௌலட் அறிக்கை, 1908-ம் ஆண்டுத் தொடக்கத்திலேயே, சென்னையிலிருந்த 'பப்ளிக் ஒர்க்ஸ் இஞ்சினீயரிங் ஓர்க்ஷாப்'பில் பயின்று வந்த மாணவர்களிடம் ரஷ்யர்களது ரகசிய ஸ்தாபனங்களின் நடவடிக்கைகளை விவரித்துக் கூறும் ஒரு பிரசுரத்தின் பல பிரதிகள் இருந்தது கண்டறியப்பட்டதாகக் கூறியது.

எனவே பயங்கரவாத நடவடிக்கைகளிலும் ஆயுதந் தாங்கிய கலகங்களைப் புரிவதிலும் நம்பிக்கை கொண்டிருந்த இளைஞர்கள் தமக்குள் ஸ்தாபன ரீதியாகத் திரண்ட போர்க் குணம் மிக்க கோஷ்டி ஒன்றும் தமிழ்நாட்டில் அன்று

இருந்தது. அந்த கோஷ்டியின் தலைவரே நீலகண்ட பிரம்மச்சாரி. இவர் மகாகவி பாரதிக்கும், எம்.பி.டி. ஆச்சார்யாவுக்கும் நெருங்கிய நண்பராக இருந்தார். 1908ல் தமிழ் நாட்டிலிருந்த தீவிரத் தேசியவாதிகள் கைது செய்யப்படக் கூடிய அபாயம் ஏற்பட்டபோது, நீலகண்ட பிரம்மச்சாரி தலைமறைவாகி, இந்திய நாட்டின் பிற பகுதிகளிலிருந்த பயங்கரவாதத் தேசபக்தர்களோடு சேர்ந்து பணிபுரிந்து வந்தார். மேலும் அவர் தமிழ்நாடு முழுவதிலும் ரகசியமாகச் சுற்றுப் பயணம் செய்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் பலாத்காரமாகத் தூக்கியெறிய வேண்டும் என்று ரகசியக் கூட்டங்கள் நடத்தி வந்ததோடு, இதற்காக, ஆயுதந்தாங்கிய இளைஞர்களைக் கொண்ட ரகசிய ஸ்தாபனத்தையும் திரட்டி வந்தார்.

1911-ம் ஆண்டின் ஆஷ் கொலை வழக்கு என்ற அந்தக் காலத்தின் பிரபல அரசியல் கொலை வழக்கில், நீலகண்ட பிரம்மச்சாரிதான் அரசாங்கத்தால் குற்றம் சாட்டப்பெற்ற "முதல்எதிரி". அந்நாளில் திருநெல்வேலி ஜில்லாக் கலெக்டராக இருந்த எஸ். டபிள்யூ. டி. ஆஷ் என்ற வெள்ளைக்காரனை, நீலகண்ட பிரம்மச்சாரியின் சீடனான வாஞ்சி என்ற இளைஞன் மணியாச்சி ரயில் நிலையத்தில் சுட்டுக் கொன்று விட்டுத் தானும் தற்கொலை புரிந்து கொண்டு விட்டான். இதன் விளைவே மேற்கூறிய கொலை வழக்கு. 1908-ல் திருநெல்வேலி ஜில்லாவில் நிகழ்ந்த ஈவிரக்கமற்ற அடக்கு முறைக்கு ஆஷ்தான் பொறுப்பாளி. அவனே சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி என்ற முதல் தேசியக் கப்பல் போக்குவரத்துக் கம்பெனியைத் தோற்றுவித்தவரும், மாபெரும் தேசபக்தருமான வ. உ. சிதம்பரம் பிள்ளையைச் சிறைக்குள் தள்ளி, இந்திய தேசியக் கப்பல் தொழில் முயற்சியை நசுக்குவதற்குக் கருவியாக விளங்கியவன். எனவே அப்போது முதற்கொண்டே மேற்கூறிய புரட்சிவாதிகள் அவனைக் 'குறி' வைத்திருந்தார்கள். இறுதியில் அவன் வாஞ்சியின் துப்பாக்கிக் குண்டுக்குப் பலியானான். ஆஷ் கொலையானது, 1911-ல் இந்தியாவுக்கு ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் வர உத்தே

சித்திருந்த வேளையில், காலனியாட்சியாளருக்கு ஓர் எச்சரிக்கையாக நிகழ்த்திய கொலைதான் என்றும், அப்போது ஐரோப்பாவில் இருந்து வந்த எம். பி. டி. ஆச்சாரியாவிடமிருந்து வந்த 'உத்தர'வின் பேரிலேயே இது நிகழ்ந்தது என்றும் கூறப்படுகிறது.

நீலகண்ட பிரம்மச்சாரி கல்கத்தாவில் கைது செய்யப்பட்டு, சென்னைக்குக் கொண்டு வரப்பட்டார். சென்னையில் 75 நாட்கள் நடந்த விசாரணைக்குப் பின்னர், அவருக்கு ஏழாண்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அவர் சிறையிலிருந்த காலத்தில் முதல் உலகப் போரும் வெடித்தது. அப்போது இந்தியாவிலிருந்த பல புரட்சியாளர்களும் ஆயுதந் தாங்கிய போராட்டத்துக்கான தருணம் வந்துவிட்டதாகவும், அதற்குத் தேவையான உதவி வெளிநாட்டிலிருந்து வந்து சேருமென்றும் நம்பினார்கள். இதேபோல் நம்பிய நீலகண்ட பிரம்மச்சாரி சிறையிலிருந்து தப்பி ஓடிவிட்டார். என்றாலும் அவர் விரைவிலேயே பிடிபட்டார்; மேலும் ஆறு மாதச்சிறைத்தண்டனையோடு மீண்டும் சிறைக்கு அனுப்பப்பட்டார்.

இதன்பின் அவர் தமது தண்டனைக் காலம் முழுவதும் முடிந்து 1919 ஆகஸ்டு மாதத்தில்தான் விடுதலையானார். விடுதலையாகி வெளிவந்ததும், அவர் மீண்டும் புரட்சிப் பணியில் முழு மூச்சோடு இறங்கினார். எனினும் பழைய முறையில் அல்ல. அக்டோபர் புரட்சி அவருக்கு அதற்கான வழியைக் காட்டியது. அவர் கம்யூனிஸ்டுக் கொள்கைகளின்பால் ஈடுபாடு கொண்டு, அவற்றைப் பரப்பவும் தொடங்கினார். "இது விஷயத்தில், அவர் இந்த நாட்டில் கம்யூனிசத்தை முதன் முதலில் பிரசாரம் செய்தவர்களில் ஒருவராக விளங்கினார்" என்று அவரது வரலாற்றை எழுதியுள்ள ரா. அ. பத்மநாபன் எழுதுகிறார். (**The Revolutionary who has turned a Sadhu, Free India,** 1972). இவரைக் குறித்து புதிய அலை பத்திரிகை ஆசிரியை டாக்டர் எஸ். விஜயலக்ஷ்மி அண்மையில் எழுதிய கட்டுரையொன்றில், தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டு இயக்கத்துக்கும், தொழிற் சங்க

இயக்கத்துக்கும் ஆரம்பகால முன்னோடிகளில் ஒருவராக விளங்கிய சிங்காரவேலு செட்டியாருடன், இவர் சென்னையில் தங்கியிருந்து கம்யூனிஸ்டுத் திட்டம் (Communist Manifesto) ஒன்றைத் தயாரித்து வெளியிட்டதாக எழுதியிருக்கிறார். (புதிய அலை, 26.1.1975 இதழ்). இந்நூலின் பிரதி இதுவரை நமக்குக் கிடைக்காத காரணத்தால், இதன் உள்ளடக்கம் பற்றி எதுவும் தெரியவில்லை. என்றாலும், 1922-ம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கம் தடை விதித்த புத்தகங்களின் பட்டியலைப்பற்றி இந்திய நாட்டின் தேசிய ஆவணக் காப்பகத்திலுள்ள தஸ்தாவேஜியில், சென்னை, செங்கல்பட்டைச் சேர்ந்த மில்லர் அன் கம்பெனி அச்சிட்டு வெளியிட்ட ''இந்தியக் கம்யூனிஸ்டுச் சமஷ்டிக் கழகம்', (The Communist Federal League of India) என்ற நூலும் இடம் பெற்றுள்ளது. மேலும், இருபதாம் ஆண்டுகளில் பிரிட்டிஷ் இந்தியாவில் உளவு இலாகாவின் டைரக்டர் ஜெனரலாக இருந்தவரும், ''இந்தியாவில் கம்யூனிஸம்'' (1926) என்ற ரகசிய அறிக்கையை எழுதியவருமான செஸில் கோயி, நீலகண்ட ஐயர் எழுதி வெளியிட்ட ''இந்தியக் கம்யூனிஸ்டுச் சமஷ்டிக் கழகம்'' என்ற 1922-ல் தடை செய்யப்பட்ட நூலும், அப்போது ஐரோப்பாவிலிருந்து எம். என். ராய் வெளியிட்டு வந்த வான்கார்டு (Vangurd) என்ற கம்யூனிஸ்டு மாதமிருமுறையின் விளைவேயாகுமென எழுதியிருக்கிறார். (Documents of the History of the CPI, Vol. I).

இதிலிருந்து நீலகண்ட பிரம்மச்சாரி காரல் மார்க்ஸின் ''கம்யூனிஸ்டு அறிக்கை''யை வெளியிடவில்லை, மாறாக, தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டு இயக்கத்தை உருவாக்குவதற்காக, கம்யூனிஸ்டுக் கோட்பாடுகளின் அடிப்படையில் அவரோ அல்லது அவரது கோஷ்டியோ தயாரித்திருந்த அறிக்கையைத்தான் வெளியிட்டார் என்று நாம் முடிவு கட்டலாம். இது உண்மையானால், தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டு இயக்கத்தை உருவாக்குவதிலும், அக்டோபர் புரட்சியின் செய்தியைப் பரப்புவதிலும் முன்னோடியாக விளங்கியவர்களில் அவரும் ஒருவர் என்றே நாம் கூறலாம். இரு

பதாம் ஆண்டுகளில் அவர் எழுதிய எழுத்துக்கள், மற்றும் அவரது நடவடிக்கைகள் முதலியவைபற்றி நமக்கு இன்னும் விவரங்கள் கிடைக்கவில்லை. என்ருலும், அவரது வரலாற்றை எழுதியுள்ள ரா. அ. பத்மனுபன் கூறியுள்ளது போல், ''அவரது பேச்சுக்களும் பிரசுரங்களும் அவரை மீண்டும் தொல்லைக்கு உள்ளாக்கின.'' 1922-ல் அவர் மீண்டும் கைது செய்யப்பட்டார்; ராஜத்துரோகம் மற்றும் பிற ''குற்றங்களுக்காக''ப் பத்தாண்டுச் சிறைத் தண்டனை யும் பெற்ருர். அவர் தமது சிறைவாசத்தை அப்போது பிரிக்கப்படாதிருந்த பஞ்சாபில் மாண்ட் கோமரி சிறை யிலும், மூல்ட்டான் சிறையிலும், சிறிது காலம் ரங்கூன் சிறையிலும் கழித்தார். ரங்கூன் சிறையிலிருந்து 1930-ல் விடுதலையாகிச் சென்னைக்கு வந்தார். ஆயினும் அதன்பின் அவர் அரசியல் நடவடிக்கைகளைக் கைவிட்டு விட்டு, நாடு முழுவதிலும் சுற்றித் திரிந்தார்; 1933-ல் சன்னியாசியாக மாறிவிட்டார். அன்று முதல் அவர் தம் பெயரையும் சாது சத்குரு ஓம்கார் என்று மாற்றிக்கொண்டார். இப்போது 90 வயதை எட்டிவிட்ட அவர் மைசூரில் நந்தி மலையின் அடிவாரத்திலுள்ள ஓர் ஆசிரமத்தில் துறவியாக வாழ்ந்து வருகிருர்.

## திரு. வி. க.

மகாகவி பாரதி தமது 39-வது வயதில் 1921-ல் அற்பா யுளில் மறைந்து விட்ட போதிலும் அவர் ஏற்றி வைத்த கண்ஞேட்ட தீபத்தை, அபிலாஷையின் ஜோதியைத் தமிழ் நாட்டு எழுத்தாளர்கள் சிலர் உடனே ஏந்திக்கொண்டு விட்டனர். அவர்களும் அக்டோபர் புரட்சியைத் தமது விடுதலைக்காகப் போராடும் ஒடுக்கப்பட்ட மக்கள் அனை வருக்கும் வழிகாட்டும் துருவ தாரகையாகவே கண்டனர். அவர்களில், தமிழ் மக்கள் ''திரு. வி. க.'' என்று அன்போடு குறிப்பிட்டு வந்த வி. கல்யாணசுந்தர முதலியார் முன்னணியில் நின்ருர்.

திரு. வி. க., பாரதி காலத்திலேயே பிரபல பத்திரிகையாளராகவும் எழுத்தாளராகவும் விளங்கினார். அவர் முதலில் தேசபக்தன் என்ற பத்திரிகைக்கும், பின்னர் நவசக்தி என்ற பிரபல செய்திப் பத்திரிகைக்கும் ஆசிரியராக இருந்தார். மேலும், தமிழ்நாட்டில் தொழிற்சங்க இயக்கத்தைத் தோற்றுவித்த மூலவர்களில் அவரும் ஒருவர். அக்டோபர் புரட்சிக்குப் பின் இந்தியாவில் தானாகவே எழுந்த வேலை நிறுத்த அலையோடு, தொழிற்சங்கங்களை ஸ்தாபிக்கும் ஆரம்ப முயற்சிகளும் தொடங்கியபோது, அத்தகைய முதல் முயற்சி சென்னையிலேயே தொடங்கப்பட்டது; மேலும், 1918-19 ஆண்டிலேயே பக்கிங்ஹாம் அண்டு கர்னாட்டிக் மில் தொழிலாளர் சங்கத்தைச் சென்னையில் உருவாக்கிய முன்னோடிகளில் திரு. வி. க.வும் ஒருவர். "சென்னைத் தொழிலாளர் (பி அண்டு சி) சங்கத்"தின் தலைவராகவும் அவர் இருந்தார்.

திரு. வி. க. ஐம்பதாம் ஆண்டுகளில் தாம் காலமாகிற வரையிலும் தமது பொது வாழ்க்கைக் காலம் முழுவதிலும், சோவியத் யூனியனின் உறுதியான, உற்ற நண்பராகவும், கம்யூனிஸ்டு இயக்கத்தின், தொழிலாளர் இயக்கத்தின் அனுதாபியாகவுமே இருந்து வந்தார். நாற்பதாம் ஆண்டுகளில் அவர் தமது முதுமைப் பருவத்திலும்கூட, பி அண்டு சி மில் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைத் தலைமை தாங்கி நடத்தினார்; அதன் காரணமாக அவர் பல நாட்கள் வீட்டிலேயே சிறை வைக்கப்பட்டார். அவர் சைவசமய சித்தாந்தத்தில் ஆழ்ந்த பற்றும் பக்தியும் கொண்டிருந்த போதிலும், அவரது பல நூல்களிலும் பத்திரிகைக் குறிப்புக்களிலும் அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் சோவியத் நாட்டில் சாதிக்கப்பட்ட சோஷலிச வாழ்க்கை முறையை வெகுவாகப் பாராட்டியே எழுதினார்.

அவரது தலைசிறந்த நூல் எனக் கருதத்தகும் "வாழ்க்கைக் குறிப்புகள்" என்ற சுயசரிதையில், 1919 இறுதியில் சென்னை வந்த திலகரைத் தாம் சந்தித்து, அவரோடு மார்க்சியக் கோட்பாடுகளைக் குறித்தும், இந்திய மக்களின் விடு

தலை லட்சியத்திற்காக அவற்றைப் பிரயோகிக்கும் வாய்ப்பைக் குறித்தும் விவாதித்ததைப்பற்றித் திரு. வி. க. எழுதியிருக்கிறார். அதே நூலில் தமக்கே உரித்தான நடையில் அவர் இவ்வாறு எழுதுகிறார்:

''எனது வாழ்க்கை தொடக்கத்தில் சமயப் பணியில் ஈடுபட்டது. அதனால் பல சமய ஆராய்ச்சிப்பேறு எனக்குக் கிடைத்தது. அவ்வாராய்ச்சி பொதுமை உணர்ச்சியை உண்டாக்கியது. சமயங்களின் அடிப்படையாய் உள்ள பொதுமை-சமரசம் — ஏன் உலகில் பரவவில்லை என்று யான் எண்ணுவேன். சிற்சிலபோது ஆழ எண்ணுவேன். எனக்கு ஒன்றும் விளங்குவதில்லை. சிங்காரவேல் செட்டியார் கூட்டுறவு சிறிது விளக்கம் செய்தது. அவ்விளக்கம் பொதுமையை உலகில் பரப்பி நிலைபெறுத்த வல்லது காரல் மார்க்ஸ் கொள்கை என்ற எண்ணத்தை என் உள்ளத்தில் இடம் பெறச் செய்தது.'' இதன் மூலம் திரு. வி. க. சமய நம்பிக்கை மிக்கவராக விளங்கிய போதிலும், சமுதாய ஏற்றத் தாழ்வைப் போக்கிச் சமநீதி வழங்கும் சஞ்சீவி மூலிகை மார்க்சியம் ஒன்றேயாகும் என்றே அவர் கருதினார் எனத்தெரிகிறது. மேலும், ''கட்டுரைத்திரட்டு'', ''இந்தியாவும் விடுதலையும்'' ஆகிய அவரது நூல்களும் பிற நூல்களும் மார்க்சிய-லெனினியக் கொள்கைகளைக் குறித்து அவர் நடத்திய சிந்தனை விசாரங்களையும், அக்டோபர் புரட்சியின் சாதனைகளின்பால் அவர் காட்டிய பாராட்டுணர்வையும் புலப்படுத்துவனவாகும்.

மேலும், இன்றைய "இந்திய-சோவியத் கலாசாரக் கழக"த்தின் முன்னோடியான ''சோவியத் நண்பர்கள் சங்கம்'', இரண்டாம் உலகப்போர் ஆண்டுகளின்போது, நாஜி ஹிட்லரின் படைகள் சோவியத் யூனியனைத் தாக்கிய சில நாட்களில் இந்தியாவில் தொடங்கப்பட்டபோது, அதன் தமிழ் நாட்டுக் கிளையின் தலைவராக திரு. வி. க.வே தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்நாட்களில் அவர் எழுதிய எழுத்துக்களும், மற்றும் தமிழகமெங்கணும் அவர் சுற்றுப் பயணம் செய்து ஆற்றிய சொற்பொழிவுகளும் சோவியத் யூனியனுக்குத்

தமிழ் நாட்டில் பல நண்பர்களைப் பெற்றுத் தந்தன; சோவியத் யூனியனையும் அதன் சாதனைகளையும் தெரிந்து கொள்ளவும் புரிந்து கொள்ளவும் தமிழ் மக்கள் பலரிடையே பேரார்வத்தையும் அவை எழுப்பின. அவர் ஐம்பதாம் ஆண்டுகளில், தமது அந்திம காலத்தில் எழுதிய 'அருளும் பொருளும்' என்ற நூலிலும்கூட, பாரதநாட்டு உன்னத புருஷர்களும் கவிஞர்களும் மிகவுயர்வாகப் போற்றி வந்த ஆன்மிக மதிப்புக்களையெல்லாம், மார்க்சிய-லெனினியக் கொள்கைகளின் மூலம் சமுதாயத்தை நல்ல விதமாக மேம்படுத்தி மாற்றியமைத்து, மனிதனின் லோகாயத் தேவைகள் அனைத்தையும் வாழ்வில் உத்தரவாதம் செய்யும் காலத்தில்தான் எதார்த்த வாழ்வில் எய்த முடியும் என்ற முடிவுக்கே அவர் வந்திருந்தார். பாரத நாட்டின் கலாசார, ஆன்மிக மதிப்புக்களுக்கும், சோஷலிசத்தின் அரசியல், பொருளாதாரக் கோட்பாடுகளுக்கும் இடையே ஓர் ஒருங்கிணைப்பைக் கொண்டுவரும் வேட்கையையும் இந்நூல் புலப்படுத்துகிறது.

# 4

## எம். சிங்காரவேலு செட்டியார்

திரு. வி. க. வோடு அவரது தொழிற்சங்க நடவடிக்கைகளில் நெருங்கிய தோழராக இருந்தவரும், தமிழ் நாட்டில் தொழிலாளி வர்க்க இயக்கத்தின், தொழிற்சங்க இயக்கத்தின் ஆரம்பகால முன்னோடிகளில் ஒருவருமான காலஞ்சென்ற எம். சிங்காரவேலு செட்டியாரும், அக்டோபர் புரட்சின் செய்தியையும், விஞ்ஞான சோஷலிசக் கருத்துக்களையும் பரப்பவும், சென்னையில் ஒரு கம்யூனிஸ்டுகள் கோஷ்டியை உருவாக்கவும் முதன்முதலில் பாடுபட்டவர்களில் ஒருவராவார்.

வழக்கறிஞராக இருந்த சிங்காரவேலர் தேசத்தின் அழைப்புக்குச் செவி சாய்த்து, தமது வழக்கறிஞர் தொழிலைத் துறந்தார்; இருபதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும் அவர் இருந்தார். அ. இ. காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் என்ற முறையில் அவர் 1922-ல் கயாவில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்துக்குச் சென்று, அங்கு பூரண சுதந்திரம் பற்றிய ஒரு தீர்மானத்தையும் பிரேரேபித்தார்; தொழிலாளர் நலம் பற்றிய தீர்மானம் பற்றியும் பேசினுர்; ''காங்கிரஸ்காரர்களுக்கான புதிய பிரகடனம்'' என்ற அறிக்கையையும் அங்கு சுற்றுக்கு விட்டார். 1923 மே மாதத்தில் இந்தியாவில் முதன்முதலாக நடந்த மே தினக் கூட்டம் அவரது தலைமையில் சென்னையில் நடந்தது. அக் கூட்டத்தில் அவர் இந்துஸ்தான் தொழிலாளர்-விவசாயிகள் கட்சியின் (Labour Kisan Party of Hindustan) உதயத்தை அறிவித்தார்; அதன் அறிக்கையை ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிட்டார். கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக நடந்த கான்பூர் சதி வழக்கின்போது, அவருக்கு எதிராகவும் ஒரு கைது-வாரண்ட் இருந்தது. ஆனுல் அவரது உடல் நலக்குறைவு காரணமாக அந்த வாரண்ட் அமல் நடத்தப் படவில்லை; பின்னர் அது ரத்தும் ஆகிவிட்டது. 1925-ல் அவர் கான்பூரில் நடந்த முதல் கம்யூனிஸ்டு மாநாட்டுக்குத் தலைமை வகித்து, அதன் தொடக்கவுரையை நிகழ்த்தினுர். 1923 இறுதியில் அவர் தம்மீது வாரண்ட் பிறப்பிக்கப்படும் வரையிலும் லேபர் அண்டு கிஸான் கெஜட் என்ற ஆங்கில மாதமிரு முறைப் பத்திரிகையை வெளியிட்டு வந்தார்; இருபதாம் ஆண்டுகளிலும் முப்பதாம் ஆண்டுகளிலும் அவர் தொழிலாளி என்ற தமது வாரப்பத்திரிகை உட்பட பல தமிழ்ப் பத்திரிகைகளை வெளியிட்டு வந்தார்; அல்லது அவற்றோடு சம்பந்தப்பட்டிருந்தார்.

முப்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில், அவர் சுய மரியாதை இயக்கத்தின் தலைவரான பெரியார் ஈ. வே. ராமசாமியோடு தொடர்பு கொண்டு, சுய மரியாதை

இயக்கத்தின் குடியரசு பத்திரிகையில், அக்டோபர் புரட்சியையும், லெனினையும், சோவியத் யூனியனையும் பற்றிப் பல கட்டுரைகள் எழுதினார். அந்த இயக்கத்தில் அக் காலத்தில் சோஷலிஸ்டுகளின் அணி ஒன்றும் இடம் பெற்றிருந்தது. 1932 இறுதியில், சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்த சோஷலிஸ்டுகளின் மாநாடு நடந்தபோது, அந்த சோஷலிஸ்டுகளுக்கான ஒரு திட்டத்தைச் சிங்காரவேலர் சமர்ப்பித்தார்; விவாதத்துக்குப் பின்னர் திட்டம் ஏற்றுக் கொள்ளவும் பட்டது. என்றாலும் பின்னர் பெரியார் ஈ. வே. ரா. பிரிட்டிஷ்-ஆதரவு மனப்பான்மை கொண்ட ஜஸ்டிஸ் கட்சியை ஆதரிக்கத் தீர்மானித்து விட்டதால், சுயமரியாதை இயக்கத்திலிருந்த சோஷலிஸ்டுகள் அதனை விட்டு 1934-ல் வெளியேறினர்.

தமிழ் நாட்டின் முதுபெரும் தொழிற்சங்கத் தலைவரான கே. முருகேசன் இவ்வாறு எழுதுகிறார்: "1935-ல் 'புது உலகம்' பத்திரிகை தொடங்கப் பட்டது. தலைவர் ம. சிங்காரவேலு அவர்களின் வழி காட்டுதலின்கீழ் வெளி வந்த இந்த ஏட்டின் ஆசிரியராகவும் வெளியிடுபவராகவும் நான் பொறுப்பேற்றேன். தோழர் சிங்காரவேலு அவர்களின் முற்போக்குக் கட்டுரைகள் அதில் இடம் பெற்றன.. இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியை 1934-ல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தடை செய்தது. எனவே சென்னை நகரில் "தொழிலாளர் பாதுகாப்புச் சங்கம்" (Labour Protection League) என்ற பெயரில் கம்யூனிஸ்டுகள் இயங்கி வந்தனர். புது உலகம் பத்திரிகையை நடத்தி வந்த நாங்கள் இந்தச் சங்கத்துடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டோம். ...மார்க்ஸிய-லெனினியக் கட்டுரைகளைப் புது உலகம் விரும்பி வெளியிட்டது" (தாமரை - ஏப். 70). புது உலகம் ஈராண்டுக் காலம் வெளிவந்து பிறகு நின்று விட்டது. இந்தப் பத்திரிகையோடும் கம்யூனிஸ்டுகளோடும் தொடர்பு கொண்டிருந்த சிங்காரவேலர் 1946-ல் தாம் காலமாகிற வரையிலும் சோவியத் யூனியனின் நண்பராகவும், சோஷலிசத்தின் ஆதரவாளராகவுமே இருந்து வந்தார்.

மார்க்சிய-லெனினியத்தையும், அக்டோபர் புரட்சியின் பணியையும் செய்தியையும் பற்றித் தமிழ் நாட்டின் சாதாரண வாசகர்கள் சிங்காரவேலரின் எழுத்துக்களின் மூலமே முதன் முதலில் தெரிந்து கொண்டனர் எனலாம். அவரும் இத்தகைய எழுத்துக்களைப் பத்தாண்டுகளுக்கும் மேலாக எழுதி வந்தார்.

## லெனின் மறைந்தபோது

லெனின் காலமானபோது, அந்த மாபெரும் தலைவரின் மறைவுக்குப்பின் உடன் வெளிவந்த சிங்காரவேலரின் லேபர் அண்டு கிசான் கெஜட் பத்திரிகையின் 31-1-1924 தேதியிட்ட இதழ், "தோழர் நிக்கொலாய் லெனின்-நினைவாஞ்சலி" என்ற கட்டுரையை முதல் பக்கத்தில் தாங்கி வெளி வந்தது. அதில் சிங்காரவேலர் இவ்வாறு எழுதியிருந்தார்: "மானிடத் துயரங்களைக் களைய முயன்று வந்துள்ள மனித புத்திரர்களிடையே நிக்கொலாய் லெனின் இன்று ஈடிணையற்று விளங்குகிறார். வறுமையின் காரணம் பற்றியும் அதற்கு முடிவு கட்டுவது பற்றியும் ஏனையோர் யாவரும் தெளிவற்ற கற்பனைகளில் ஈடுபட்டுக் கொண்டும், சமுதாய நீதிக்கான கடைசி எல்லை 'தானம்'தான் என்று உபதேசித்துக் கொண்டும் இருந்த வேளையில், உலகத் துயரங்களுக்கான உண்மையான காரணம் சிலர் பலரைச் சுரண்டி வாழ்வதிலேயே அடங்கியிருந்ததை நிக்கொலாய் லெனின் கண்டறிந்தார்; இந்தச் சமுதாய அநீதியைத் தமது சொந்த நாட்டில் சாத்தியமற்ற தாக்குவதிலும் அவர் வெற்றி கண்டார். உலகத் தொழிலாளர்களிடையே இன்று ரஷ்யத் தொழிலாளி தான் மிகவும் மகிழ்ச்சிகரமாக இருப்பதாகக் கருத முடியும். அவரது தோழர்களான நாம் இப்போது யாருடைய மரணத்துக்காக வருந்துகிறோமோ, அந்த அலுப்புச் சலிப்பற்ற உழைப்பாளியே இதற்குப் பிரதான காரணம்."

லேபர் அண்டு கிசான் கெஜட் பத்திரிகையைத் தவிர, சுதேசமித்திரன் பத்திரிகையும் 25-1-1924 அன்று லெனினது

மரணம் குறித்துத் தலையங்கம் எழுதி, அவரது சாதனைகளைப் புகழ்ந்து நினைவாஞ்சலி செலுத்தியது. இதன்பின் வந்த இதழ் ஒன்றில், லெனினது மரணத்துக்குப் பின் இரு வாரங்கள் கழித்து சென்னையில் நடந்த சென்னை தொழிற் சங்கங்களது மாநாட்டில், முதுபெரும் தொழிற்சங்கத் தலைவர்களான திரு. வி. க. வும், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடுவும், லெனினைக் குறித்துப் பேசிய பேச்சுக்களின் பகுதிகளைச் சுதேசமித்திரன் வெளியிட்டிருந்தது. இந்த மாநாட்டில் எட்டுத் தொழிற்சங்கங்களைச் சேர்ந்த தலைவர்கள் லெனினுக்கு அஞ்சலி செலுத்தி உரையாற்றினர்.

## இளம் கவிஞர் ஒருவரின் நினைவாஞ்சலி

கிட்டத் தட்ட இதே காலத்தில், மகாகவி பாரதியின் நெருங்கிய நண்பரும் சீடருமான பரலி சு. நெல்லையப்பர் நடத்தி வந்த லோகோபகாரி என்ற தமிழ் வாரப் பத்திரிகையின் 21-2-1924 தேதியிட்ட இதழில், பாஸ்கர ஆதிமூர்த்தி என்ற இளங்கவிஞர் லெனினது மரணம் குறித்து ''காலஞ் சென்ற நிக்கொலாய் லெனின்'' என்ற தலைப்பில் எழுதிய சரமகவி வெளி வந்தது. எழுசீரடி ஆசிரிய விருத்தத்தில் ஏழு பாடல்களைக் கொண்ட இந்தச் சரமகவி, லெனின் சிறையிலும் தேசப் பிரஷ்ட வாழ்விலும் அனுபவித்த துன்பங்களை நினைவு கூர்ந்தது. நீதியை நேசிப்பவர்கள் எல்லோரும், கற்றோரும் ஞானியரும் லெனினது மரணத்துக்காக வருந்துவதாகவும், ஏனெனில் அவர் ஏழைகளின் நண்பராக அவர்களை விடுதலை செய்த வீரராக வாழ்ந்தார் என்றும் அந்தக் கவிதை அஞ்சலி செலுத்தியது. அதில் ஒரு பாடல்:

பசியொரு புறத்தும், நளிர்
குளிரொரு புறத்தும், உயிர்
பருகி யழிவுற்ற படியே
நிசியொரு புறத்தும், மிகு
நிலையறு பலக் குறைவும்
நெடிதுயிர் நசிக்கும் எளியோர்

இசையுடன் எழும்பும் வகை
எதுவென நினைத்துவகை
எழுவதை இயற்று பெரியோய்
திசைவளர் புகழ்க்குரிய
லெனின் எனும் இயற்பெயர்
தினகர விரற்குரவனே!

பாஸ்கர ஆதிமூர்த்தி என்ற இந்த இளம் கவிஞர், காசி நகர வாசியாக, திருநெல்வேலி ஜவுளி வியாபாரிகளான கே.எஸ். முத்தையா அண்டு கம்பெனி, காசி நகரில் வைத்திருந்த கிளைக்கடையோடு சம்பந்தப்பட்டவராக இருந்தவர் என்ற விவரத்தைத் தவிர, இவரைக் குறித்து வேறு விவரம் ஏதும் தெரியவில்லை. அவர் லோகோபகாரியில் வேறு பல பாடல்களும் எழுதியிருக்கிறார். அவற்றில் ஒரு பாடல் பொதுவாக சமத்துவத்தைப் பற்றிக் கூறும் பாடல்; மற்றொன்று லெனினையும் காந்தியையும் ஒப்புநோக்கிப் பாடியபாடல்.

சமத்துவம் பற்றிய முதற் பாடலின் கருத்து வருமாறு: இன்று உலகம் யாருக்குச் சொந்தமாக இருக்கிறதோ அந்தச் சிலருக்கு அது சொந்தமானதல்ல; அது எல்லோருக்கும் சொந்தமானது. மனிதகுலம் பிறப்பித்த எல்லாக் கருத்துக்களிலும் சமத்துவமே மிக உன்னதமானது. அது போருக்கெல்லாம் முடிவுகட்டும் போர் பெற்ற குழந்தை. அத்தகைய போர் ரஷ்யாவில் வெற்றிபெற்று, கொடுங்கோலாட்சியை முறியடித்து, சமத்துவத்தைத் தோற்றுவித்துள்ளது.

லெனினையும் காந்தியையும் பற்றிய பாடலில் இருவரும் பின்வரும் விதத்தில் ஒப்புநோக்கப்பட்டிருந்தனர்: இருவேறு நாடுகளில் இரு பெரும் தலைவர்கள் உள்ளனர். எனினும் இருவரும் ஒரே லட்சியத்திற்கே, போர்களையும் வறுமையையும் எதேச்சாதிகாரத்தையும் ஒழிக்கும் லட்சியத்துக்கே போராடுகின்றனர். இந்த இருவரில் லெனின் ஜாரின் கொடுங்கோலாட்சியை எதிர்த்துப் போரிட்டு வென்று, ஏழை மக்களை விடுவித்துஅவர்களுக்கு உணவும் சுதந்திரமும் வழங்கினார். காந்தி இந்திய விடுதலைக்காகப் போராடி வரு

கிறார். இருவரும் விரைவில் வெற்றி பெறுவர். இந்த இரு பெரும் தலைவர்களும் தேர்ந்தெடுத்த மார்க்கங்கள் வேறு வேறாயினும் குறிக்கோள்கள் ஒன்றேதான். இவர்களுக்கு நாம் தலை வணங்குவோம்.

# 5

## 1930 ஆம் ஆண்டுகளில்

பலமுறை கைது செய்யப்பட்டதன் காரணமாகவும், சோஷலிஸ்டுகளின் இயக்கத்தை கட்டியமைத்து வந்தவர்களை அன்றைய பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் பல்வேறு தொல்லைகளுக்கும் துன்புறுத்தலுக்கும் ஆளாக்கி வந்த நிலைமையின் காரணமாகவும், இருபதாம் ஆண்டுகளின் இறுதியில் சிங்கார வேலர் சோஷலிசக் கருத்துக்களைச் சட்ட பூர்வமான முறைகளின் மூலம் மட்டுமே பரப்பிவர முற்பட்டார். இதுவே அந்நாளில் கடவுள் எதிர்ப்பு, மாதர் விடுதலை, ஜாதிக் கொடுமையிலிருந்து விடுதலை முதலிய நோக்கங்களுக்காகப் பாடுபட்டு வந்த சுயமரியாதை இயக்கத்தோடு அவர் தொடர்புகளை மேற்கொள்ள வழி வகுத்தது. இந்தத் தொடர்பின் பயனாக, சுயமரியாதை இயக்கத்தின் தந்தையும் தலைவருமான பெரியார் ஈ.வே.ரா., ''பேஜ்போஷ்னிக்'' என்ற சோவியத் நாத்திகக் கழகத்தின் விருந்தினராக 1931-ல் சோவியத் யூனியனுக்குச் சென்று வந்தார். ஈ.வெ.ரா. தாயகம் திரும்பிய பின் தமது சொந்த அச்சகத்தை நிறுவி, குடியரசு என்ற வாரப் பத்திரிகையையும் வெளியிட்டு வரத் தொடங்கினார். மேலும், அவர் தமது அச்சகத்தின் புத்தக வெளியீட்டுப் பிரிவின் மூலம், மதம் பற்றி லெனின் எழுதிய கட்டுரைத் தொகுப்பின் தமிழாக்கத்தை ''லெனினும் மதமும்'' என்ற தலைப்பில் 1933-ல்

வெளியிட்டார். தமிழில் புத்தக வடிவில் வெளிவந்த லெனி னது முதல் நூல் இதுதான் என்பதைக் குறிப்பிடவேண்டும். சிங்காரவேலரும் மற்றும் சுயமரியாதை இயக்கத்தில் இருந்த சோஷலிசக் கருத்துக்களைக் கொண்ட இளைஞர்கள் சிலரும் குடியரசுப் பத்திரிகையில் ஆரம்ப முதற்கொண்டே சோஷலிசத்தைப் பற்றி எழுதிவரத் தொடங்கினர். அந்த இளைஞர்களில் ஒருவரே ப. ஜீவானந்தம்.

## ஜீவானந்தம்

ஈ. வே. ரா. வுடன் இருந்து, பின்னல் கம்யூனிஸ்டு களாக மாறியவர்களில், தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டுக் கட்சியைக் கட்டியமைத்த மூத்த தலைவர்களில் ஒருவரும், 'ஜீவா' என்று தமிழக மக்களால் அன்போடும் அருமை யோடும் குறிப்பிடப்பட்டவருமான ஜீவானந்தம் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்.

ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கெடுத்த காரணத் தால், முப்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் ஜீவானந்தம் திருச்சி சிறையில் அரசியல் கைதியாக இருந்து வந்தார். அந்தச் சிறைவாசத்தின் போது, பூதகேஸ்வர தத், ஆச் சார்யா போன்ற சில இந்தியப் புரட்சிவாதிகள் லாகூர் சிறையிலிருந்து திருச்சி சிறைக்கு மாற்றப்பட்டனர் இது அவர்களுக்கு எதிர்பாராமல் கிட்டிய நல்ல வாய்ப்பாக அமைந்தது. அவர்கள் திருச்சி சிறையிலிருந்த அரசியல் கைதிகளுக்கு மார்க்சையும் லெனினையும் பற்றி, கம்யூ னிஸ்டுக் கோட்பாடுகளைப் பற்றி வகுப்புக்கள் நடத்தினர். மேலும், அந்தப் புரட்சிவாதிகள் சிறைக்குள் எப்படியோ கடத்திக் கொண்டு வந்திருந்த மார்க்சிய நூல்கள் சில வற்றைப் படித்துப் பார்க்கும் வாய்ப்பும் திருச்சி சிறையி லிருந்த அரசியல் கைதிகளுக்குக் கிட்டியது. இந்த அரசியல் கைதிகள் பின்னர் விடுதலையானபோது, சிறையில் அந்தப் புரட்சிவாதிகள் நடத்திய அரசியல் வகுப்புகளின்போது தாம் எடுத்த குறிப்புகள் அனைத்தையும் வெளியே கொண்டு வந்தனர். அவற்றின் அடிப்படையில் அவர்கள் குடியரசுப்

பத்திரிகையில் பல கட்டுரைகளையும் தொடர்ந்து எழுதினர். இந்தக் கட்டுரைகள் 1933-ல் குடியரசுப் பதிப்பகத்தின் வெளியீடாக, ''பொதுவுடைமைத் தத்துவங்கள்'' என்ற பெயரில் புத்தகமாக வெளிவந்தது.

என்றாலும், 1934-ல் சுயமரியாதை இயக்கத்தின் தலைவரான ஈ.வெ.ரா., ஜஸ்டிஸ் கட்சியை ஆதரிக்கத் தொடங்கிவிட்ட பிறகு, ஜீவாவும், சோஷலிச மனப்பான்மை கொண்ட ஏனைய இளைஞர்களும் அந்த இயக்கத்திலிருந்து விலகினர். ஜீவானந்தம் பின்னர் தமிழ்நாட்டுக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மூல கர்த்தாக்களில் ஒருவராக மாறிவிட்டார்.

தமிழறிஞராகவும் கவிஞராகவும் திகழ்ந்த ஜீவா 1932ம் ஆண்டுதொட்டே அக்டோபர் புரட்சியைப் பற்றியும் லெனினைப்பற்றியும் சோவியத் நாட்டைப் பற்றியும் பல பாடல்களைப் புனைந்து வெளியிட்டு வந்தார். இந்தப் பாடல்கள் பலவும் பின்னர் தொகுக்கப்பட்டு, ''ஜீவாவின் பாடல்கள்'' என்ற தலைப்பில் சென்னை என். சி. பி. எச். வெளியீடாக 1962ல் புத்தகமாக வெளியிடப்பட்டது.

ஜீவாவின் பாடல்கள் அந்தக் காலத்திலேயே அரசியல் மேடைகளில் பாடப்பட்டன; அவற்றில் சில தொழிலாளி மக்களிடையே மிகவும் பிரபலமும் அடைந்தன. 1932-ம் ஆண்டிலேயே அவர் சோவியத் யூனியனை நோக்குமாறு தொழிலாளிகளை அறைகூவி அழைத்துப் பின்வருமாறு பாடினர்

புது உலகத்தை நோக்குவீர் பூரிப்படைவீர்
இதுவரை ஈடேறு ஏழைத் தொழிலாளிகள்
எழுச்சி பெறுவதற்கே—இசைந்த இன்பப் (புது

லெனின் வழித் தியாகிகள் நேர்மை நிறைந்ததோழர்
அநியாய மென்பதறியார்—ஆட்சி கொள் ரஷ்யப் (புது

ஊணில்லை உடையில்லை ஓய்வில்லை வீடில்லை
உற்ற நற் கல்வியில்லை
உரிமையும் கடமையும் ஒத்ததாயில்லை யெனும்
ஒப்பாரி அங்கு இல்லை

வீணில்லை வேலையற்றோரில்லை தனிஉடைமை
வெம்பூத ஆட்சியில்லை
வீழ்வில்லை ரஷ்யாவில் மேலில்லை கீழில்லை
வெற்றி எல்லோர்க்கும் எல்லை

அக்டோபர் புரட்சியைப்பற்றி, உணர்ச்சியூட்டும் வழி நடைச் சந்த கதியும் வாக்கு வன்மையும் மிக்க பாட லொன்றை அவர் 1936ல் எழுதினார். அந்தப் பாடலில் அவர் இவ்வாறு பாடினார்:

சடசட வென்றே முறிந்து ஜார் விழுந்த காரணம்
தரணியெங்கும் பொதுவுடைமை தழைப்பதற்
குதாரணம்
படபடத்துத் துடிதுடித்துப் பாமரர் முன்னேகுறார்
பணம் சுமந்த ராட்சதர்கள் பதறி நொந்து சாகிறார்
வசியமிக்க மார்க்சின் கொள்கை மாநிலத்தில் பலிக்குதே
மகிழும்ரஷ்யா லெனின்படைத்த வாழ்வினால்
ஜொலிக்குதே
பசியெழுப்பும் புரட்சி வெந்தீ பார் முழுதும் எரியுதே
படையை ஏவி விடும்ஏகாதி பத்யவாழ்வு சரியுதே!

ஜீவா தமது பாடல்களைத் தவிர, தமிழ்நாட்டு இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் பத்திரிகையான ஜனசக்தியிலும், மற்றும் 1958ல் அவர் தொடங்கி, 1962 தொடக்கத்தில் அவர் காலமாகும் வரையில் அவரே ஆசிரியராகவும் இருந்து வந்த கலை இலக்கிய மாத இதழான தாமரையிலும், அக்டோபர் புரட்சியைப் பற்றியும், சோவியத் ஆட்சிக் காலத்தில் மலர்ந்துள்ள இலக்கியங்களைப் பற்றியும் பல கட்டுரைகளையும் எழுதினார். சோவியத் எழுத்தாளர்களையும் இந்திய இலக்கியங்களையும் பற்றி அவர் எழுதிய இலக்கிய விமர்சனக் கட்டுரைகள் பலவும், படைப்பிலக்கியம் சம்பந்த மாகப் பல இளம் தமிழ் எழுத்தாளர்கள் தமது கண்ணோட் டத்தையும் அணுகல் முறையையும் உருவாக்கிக் கொள்ளவும் நம்பிக்கையூட்டும் பல தமிழ் எழுத்தாளர்களை உருவாக்கவும் உதவின என்றும் கூறலாம். அவர் தொடக்கி வைத்த மரபைத் தாமரை இன்றும் தொடர்ந்து பின்பற்றி வருகிறது.

## பாரதிதாசன்

கனக சுப்புரத்தினம் என்ற தமது இயற்பெயரைப் 'பாரதிதாசன்' என்று மாற்றியமைத்துக் கொண்ட பாரதி தாசன், பாரதியின் அஞ்ஞாத வாச காலத்தின்போது பாண்டிச்சேரியில் பாரதியோடு நெருங்கிய தோழமை கொண்டவராக இருந்ததோடு மட்டுமல்லாமல் பாரதியின் காலத்திலேயே திறமைமிக்க இளம் கவிஞராகவும் திகழ்ந் தார். மேலும் தமது புனைபெயருக்கேற்ப, நெடுங்காலம் வரையிலும் அவர் பாரதியின் கருத்து வழி நின்று, அவரது உண்மையான சீடராகவும் விளங்கினார். என்றாலும், பிற் காலத்தில் அவர் பெரியார் ஈ. வெ. ரா. வின் கருத்துலகத் தொண்டராக மாறி, அறுபதாம் ஆண்டுகளில் தாம் கால மாகும் வரையிலும், மூர்க்கமான தமிழினப்பற்றையும், பார்ப்பனீய எதிர்ப்பையுமே முழு மூச்சாகக் கொண்டு எழுதி வந்தார். எனினும், ரசிகர்கள் பலரும் அவரைப் 'புரட்சிக் கவிஞர்' என்று அருமையோடும் பெருமையோடும் குறிப் பிடும் அளவுக்கு அவர் வலிமைமிக்க கவிஞராகவும் விளங் கினார். முப்பதாம் ஆண்டுகளிலும் நாற்பதாம் ஆண்டு களிலும் அவர் எழுதிய மிகப்பெரும்பாலான கவிதைகள், மானிட மகத்துவத்தையும், சமுதாய, பொருளாதார சமத் துவத்தையும் ஏற்றிப்போற்றும் கருத்துக்கள் நிறைந்த, வலிமையும் வைரமும் பாய்ந்த கவிதைகளாக இருந்ததே இதற்குக் காரணம்.

அக்டோபர் புரட்சியின், சோஷலிசக் கருத்துக்களின் செல்வாக்குக்கு ஆட்பட்ட கவிஞர்களில் பாரதிதாசனும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க கவிஞரேயாவார். வீழ்ந்து கிடக்கும் மனிதனுக்குத் தெம்பூட்டும் விதத்தில் தாம் எழுதிய கவிதையொன்றில் அவர் இவ்வாறு பாடியுள்ளார்:

*மனிதரில் நீயுமோர் மனிதன்: மண்ணன்று.*
*இமைதிற! எழுந்து நின்று எண்ணுவாய்.*
*தோளை உயர்த்து! சுடர்முகம் தூக்கு!*
*மீசையை முறுக்கி மேலே ஏற்று!*

விழித்த விழியில் மேதினிக் கொளிசெய்!
நகைப்பை முழக்கு! நடத்து லோகத்தை!
உனது வீடு—உனது பக்கத்து வீட்டின்
இடையில் வைத்த சுவரை இடித்து
வீதிகள் இடையில் திரையை விலக்கி
நாட்டோடு நாட்டை இணைத்து, மேலே
ஏறு! வானை இடிக்கும் மலைமேல்
ஏறு! விடாமல் ஏறு! மேன்மேல்
ஏறி நின்று பாரடா எங்கும்!
எங்கும் பாரடா இப்புவி மக்களை!
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
என்குலம் என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல்! பார்த்து மகிழ்ச்சிகொள்!
அறிவை விரிவு செய்! அகண்ட மாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை;
அணைத்துக் கொள்; உன்னைச் சங்கமம் ஆக்கு!
மானிட சமுத்திரம் நன்றென்று கூவு
பிரிவிலை! எங்கும் பேதம் இல்லை.
உலகம் உண்ண உண். உடுத்த உடுப்பாய்....

மற்றொரு பாடலில் அவர் இவ்வாறு பாடியுள்ளார்:

புதியதோர் உலகம் செய்வோம்—கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்
பொதுவுடைமைக்கொள்கை திசையெட்டும்
சேர்ப்போம்
புனிதமோடதை எங்கள் உயிரெனக் காப்போம்

1941ல் நாஜிப் படைகள் சோவியத் யூனியனைத் தாக்கிய காலத்தில், சோவியத் யூனியனைத் தாக்கிய தவறினாலேயே ஹிட்லரின் வாழ்க்கை முடிந்து விட்டது என்ற கருத்தைப் பிரதிபலிக்கும் விதத்தில் பாரதிதாசன் ஒரு கவிதையில் இவ்வாறு எழுதியிருக்கிறார்:

எத்தனை நாட்டின் சொத்துக் குவியல்!
எத்தனை நாட்டில் இருந்த படைகள்!

எத்தனை நாட்டில் இருந்த காலாட்கள்!
அனைத்தையும் சேர்த்து, அலை அலையாக
உருசிய நாட்டை அழிக்கச் செலுத்தினன்!
உலகின் உயிரை ஒழிக்கச் செலுத்தினன்!
பெரிதினும் மிகவும் பெருநிலை கண்ட
உருசிய நாட்டை ஒழிக்கச் செலுத்தினன்!
மக்களின் வாழ்வின் மதிப்பு இன்னதென,
ஒக்க வாழும் உறுதி இதுவென
மூதிய பெரிய முழு நிலத்திற்கும்
புதிய தாகப் புகட்டிய நாட்டில்
செலுத்தினன் இட்லர்; தீர்ந்தான்; முற்றிற்று!

# 6

## லெனினைப் பற்றிய புத்தகங்கள்

முப்பதாம் ஆண்டுகளில், முக்கியமாக அதன் பிற் பகுதியிலேயே, லெனினைப் பற்றிய நூல்கள் தமிழில் வெளி வரத் தொடங்கின எனலாம். 1933-ம் ஆண்டிலேயே திருசிரபுரம் அ. நடராஜன் எழுதிய ''லெனின்: ருஷ்யாவின் விடுதலை வீரன்'' என்ற நூல் வெளிவந்தது. 32 பக்கங் கொண்ட இந்தச் சிறுநூலை சென்னை தமிழரசுப் புத்தகாலயம் வெளியிட்டிருந்தது. சிறு நூலாயினும், தமிழில் புத்தக வடிவில் லெனினைப் பற்றி வெளிவந்த முதல் வாழ்க்கை வரலாறு இதுதான் என்ற சிறப்பு இதற்குண்டு. இதன்பின் முப்பதாம் ஆண்டுகளின் பிற்பாதியில் லெனினைப் பற்றி மேலும் சில நூல்கள் வெளி வந்தன. இவற்றில் முதலாவது புத்தகம் ''காந்தியும் லெனினும்'' என்ற தலைப்பில் முதுபெரும் அறிஞரும், எழுத்தாளரும், பத்திரிகையாளரும், அந்நாளில் ரங்கூனிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த ஜோதி என்ற மாசிகையின் ஆசிரியருமான வெ. சாமிநாத

சர்மா எழுதிய ஒப்புநோக்கு நூலாகும். சுமார் 80 பக்கங்கள் கொண்ட இந்நூலை ரங்கூன் மின்னொளிப் பிரசுரம் 1937-ல் வெளியிட்டிருந்தது. இரண்டாம் உலகப் போரின் போது ஜப்பானிய ராணுவ வெறியர்கள் ரங்கூன் நகரின் மீது குண்டுகளை வீசி நாசம் செய்தபோது, பர்மாவிலிருந்து வெளியேறித் தமிழகத்துக்குத் திரும்பி வந்த சாமிநாத சர்மா பல குறிப்பிடத்தக்க நூல்களை எழுதுவதில் தமது நேரத்தை யும் சக்தியையும் செலவிட்டு வந்தார். இதன் பயனாக, யுத்த காலத்தில் அவர் எழுதிய நூல்களில் ''சோவியத் ருஷ்யா''வைப் பற்றியும், ''காரல் மார்க்ஸ்'' பற்றியும் எழுதப்பட்ட நூல்கள் இரண்டும் குறிப்பிடத்தக்கவையாகும். சோவியத் ருஷ்யா என்ற அவரது நூலே, தமிழில் சோவியத் யூனியனைப் பற்றி முதன்முதலில் வெளிவந்த முழுமையான வரலாறு என்று கூற வேண்டும். அதேபோல் காரல் மார்க்ஸ் என்ற அவரது வரலாற்று நூலும், தமிழில் மார்க்சைப் பற்றியும் அவரது கொள்கை, பணி ஆகியவை பற்றியும் முதன்முதலாக வெளிவந்த விரிவான நூலாகவே திகழ்ந்தது. இவையிரண்டும் சக்தி காரியாலய வெளியீடு களாக வெளி வந்தன.

லெனினது வாழ்க்கை வரலாறு பற்றித் தமிழில் வெளி வந்த இரண்டாவது நூல், வி. கிருஷ்ணசாமி எழுதிய ''லெனின்'' என்ற நூலாகும். இது 1939-ல் சென்னை நவயுகப் பிரசுராலய வெளியீடாக வெளிவந்தது. சுமார் 150 பக்கங் கொண்ட இந்நூலே தமிழில் முதன்முதலில் வெளிவந்த முழுமையான, விரிவான வாழ்க்கை வரலாறு எனலாம். இந்நூல் லெனினது வாழ்க்கை, பணி, போதனை கள், சாதனைகள் ஆகியவற்றைத் தமிழ் வாசகர்களுக்கு எடுத் துக் கூறியது. இதன்பின் 1940-ல் டாக்டர் பா. நடராஜன் எழுதிய ''லெனினும் ரஷ்யப் புரட்சியும்'' என்ற நூல் வெளி வந்தது.

மேலும், மேற்கூறிய நவயுகப் பிரசுராலயம் 1938—ல் சென்னையில் தொடங்கப்பட்டபோது, அந்தப் பிரசுராலயத் தின் முதல் வெளியீடாக, கம்யூனிஸத் தத்துவங்கள் பற்றிய

''எல்லோரும் ஓர் குலம்'' என்ற நூல் வெளிவந்தது. இதனை எழுதியவர் தமிழ் வாசகர்கள் எழுத்தாளர்கள் மத்தியில் ''ப.ரா'' என்று பிரபலமாகியிருந்த முதுபெரும் தேச பக்தரும் சிறந்த எழுத்தாளருமான ப.ராமசாமி. இந் நூல் அக்டோபர் புரட்சி, அதன் சாதனைகள், சோஷலிசக் கோட்பாடுகள் முதலியவற்றைக் கற்றுராய்ந்து எழுதிய சிறந்த நூலாக விளங்கியது. சோஷலிசத்தையும், அதனை அடைவதில் ரஷ்ய மக்கள் நடத்திய போராட்டத்தையும், பெற்ற வெற்றியையும் புரிந்து கொள்வதற்கு, இந்த நூல் தமிழ்நாட்டைச் சேர்ந்த பல இளைஞர்களுக்கு அந் நாட்களில் ஒரு பாலபாடமாக விளங்கியது என்றே சொல்லலாம்.

### யுத்த காலத்தில்...

இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் சோவியத் யூனியன் தன்மீது தொடுக்கப்பட்ட நாஜித் தாக்குதலை எதிர்த்து மாபெரும் தேசபக்தப் போரை நடத்திவந்த நாற்பதாம் ஆண்டுகளின் முற்பகுதியிலும், அதன்பின் போரில் சோவியத் யூனியன் வெற்றி பெற்ற காலத்திலும், தமது தாயகத்தைப் பாதுகாப்பதில் சோவியத் மக்களும் போர்வீரர்களும் புரிந்த வீரச் செயல்களைக் குறித்தும், அவர்கள் பாதுகாத்து நின்ற லட்சியங்களைக் குறித்தும், சோஷலிசத்தின் தனிச் சிறப்புமிக்க ஜீவசக்தியையும் வலிமையையும் குறித்தும், தமிழில் கட்டுரைகளும், சிறு பிரசுரங்களும், புத்தகங்களும் இடையறுது வெளிவருவது மிகவும் சகஜமாக இருந்தது. மேலும், இந்தக் கால கட்டத்தில் மார்க்சிய, லெனினிய நூல்களின் மீதும், சோவியத் நூலகளின் மீதும் விதிக்கப்பட்டிருந்த தடை அகற்றப்பட்டதன் பயனுக, இத்தகைய புத்தகங்களும் பெருமளவில் இங்கு வந்தன. இதனுல் சோவியத் யூனியனையும் அக்டோபர் புரட்சியையும் பற்றிய நூல்களை மட்டுமல்லாமல், தலைசிறந்த சோவியத் நாட்டு இலக்கியப் படைப்புக்கள் பலவற்றையும் தாராளமாகப் படித்துப் பார்க்கக் கூடிய வாய்ப்பு எழுத்தாளர்களுக்கும் வாசகர்களுக்கும் கிட்டியது. இந்தக் கால

கட்டத்தில் 'சோவியத் நண்பர்கள் சங்கம்' அமைக்கப் பட்டதும், அது தமிழ்நாடு முழுவதிலும் செயல்பட்டதும், இந்த வாய்ப்பினை மேலும் ஊக்குவித்தது.

இந்தக் காலத்தில்தான் தமிழ்நாட்டுப் பத்திரிகைகளில் ஏனைய பல விஷயங்களோடு, மாக்சிம் கார்க்கி, மிகாயில் ஷோலகோவ், இலியா இரென்பர்க் முதலிய பிரபல சோவியத் எழுத்தாளர்களின் கதைகள் உட்பட, பல சோவியத் சிறு கதைகளின் மொழிபெயர்ப்புக்களும் இடம் பெற்று வந்தன. மேலும், யுத்த ஆண்டுகளின்போது மீ. வி. சபரிராஜன் மொழி பெயர்த்த சுமார் 20 ரஷ்ய, சோவியத் சிறுகதை களின் தொகுதி ஒன்றும் "ருஷ்யச் சிறுகதைகள்" என்ற தலைப்பில் வெளி வந்தது. இவற்ருேடு, முன்னர் குறிப்பிட்ட ப. ராமசாமி (ப.ரா.), மாக்சிம் கார்க்கியின் உலகப் புகழ் பெற்ற நாவலைச் சற்றே சுருக்கப்பட்ட வடிவில் தமிழாக்கி "அன்னை" என்ற தலைப்பில் 1946-ல் வெளியிட்டார். இந்த வெளியீடு அந்தக் காலத்தில் குறிப்பிடத் தக்கதோர் நிகழ்ச்சியாக விளங்கியது. இதன் பின்னர் அவர் "அன்னை" நாவலை நாடக வடிவிலும் தயாரித்தார்; நாற்பதாம் ஆண்டு களின் பிற்பகுதியில் தயாரான இந்த நாடகம், திருநெல் வேலியில் மேடையில் அரங்கேற்றமாகிப் பலமுறை நடை பெறவும் செய்தது.

## இந்திய சுதந்திரத்திற்குப் பின்னுல்...

**1947** ஏப்ரல் மாதத்தில் இந்தியாவுக்கும் சோவியத் யூனியனுக்கும் இடையே ராஜீய உறவுகள் நிறுவப்பட்ட பிறகும், 1947 ஆகஸ்டு மாதத்தில் இந்தியா சுதந்திர மடைந்த பிறகும், சோவியத் யூனியனைப் பற்றிய புத்தகங் களும், சோவியத் எழுத்தாளர்களின் நூல்களும் தமிழில் வெளிவருவது மிகமிக அதிகரித்தது. மாக்சிம் கார்க்கி யின் "தாய்" நாவலின் முழுமையான மொழிபெயர்ப்பும் மற்றும் நிக்கொலாய் ஆஸ்திரோவ்ஸ்கி, மிகாயில் ஷோல கோவ், இலியா இரென்பர்க், அலெக்சி டால்ஸ்டாய் முதலி

யோரின் நூல்களும், மற்றும் பல சோவியத் இலக்கியங்களும் ஐம்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் தமிழில் வெளிவரத் தொடங்கின. இவற்றைப் பிரபல தமிழ் எழுத்தாளர் களான எஸ். ராமகிருஷ்ணன், கு. அழகிரிசாமி, எஸ். சங்கரன், வல்லிக்கண்ணன், அ. லெ. நடராஜன் முதலி யோரும் மற்றும் பிறரும் தமிழாக்கியிருந்தனர். மாக்சிம் கார்க்கியின் முக்கியமான நூல்கள் யாவும் இந்தக் காலத் தில் தமிழில் வெளிவந்தன. மாக்சிம் கார்க்கியின் நூல் களும் நிக்கோலாய் ஆஸ்திரோவ்ஸ்கியின் ''வீரம் விளைந் தது'' என்ற நூலும் தமிழகத்தைச் சேர்ந்த பல படைப் பிலக்கிய கர்த்தாக்களைப் பெரிதும் கவர்ந்து அவர்களைத் தமது செல்வாக்குக்கு ஆட்படுத்தின என்றே சொல்லலாம். குறிப்பாக, கார்க்கியின் தாய் நவீனமும், ஆஸ்திரோவ்ஸ்கி யின் நாவலும், உலகில் சர்வஜன நீதியும் நியாயமும் நிலைப் பதற்கான போராட்டத்தில் ஈடுபாடு கொண்ட எழுத்தாளர் களுக்கு ஓர் இலக்கியக் கொள்கைப் பிரகடனம் போலவே பயன்பட்டன. உண்மையான மனிதாபிமானம் என்றால் என்ன என்பதைப் பல தமிழ் எழுத்தாளர்களுக்கும் கற்றுக் கொடுத்ததும் மாக்சிம் கார்க்கியே எனலாம்.

சோவியத் இலக்கியங்களின் செல்வாக்கும், அக்டோபர் புரட்சியின் செல்வாக்கும், சோவியத் மக்களும் அரசும் சாதித்த சாதனைகளும், இளம் தலைமுறையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர்கள் மத்தியில் மட்டும்தான் உணரப்பட்டன என்பதில்லை. முதுபெரும் எழுத்தாளர்கள் சிலர் மத்தி யிலும் அதனை உணர முடிந்தது. உதாரணமாக, மகாகவி பாரதியின் சமகாலக் கவிஞராக விளங்கியவரும், முப்பதாம் ஆண்டுகளின்போது தமது மனிதாபிமானமும் தேசபக்தியும் மிக்க கவிதைகளின் மூலம் தமிழ் மக்களிடையே பிரபலமான வருமான கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை, ஐம்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில், தமது அந்திம காலத்தில், 77ஆவது வயதில் சோவியத் யூனியனைப்பற்றி ஒரு வெண்பா எழுதினார். அது வருமாறு :

யாதும் என் ஊரே
　　எவரும் என் கேளிரே
பூதலம் யார்க்கும்
　　பொதுவே யென்—றோதிய நற்

போதனையை முற்றும்
　　புதிய ருஷியா மக்கள்
சாதனையிற் கொண்டார்
　　தமக்கு.

மேலும், நெல்லை சோ. சண்முகம் மொழி பெயர்த்து வெளியிட்ட டைசன் கார்ட்டரின் "ரஷ்யாவின் ரகசிய ஆயுதம்" என்ற நூலுக்குத் தாம் எழுதிய முன்னுரையில் கவிமணி பின்வருமாறு எழுதியிருந்தார் :

"இரஷ்ய ஆட்சி பொது மக்கள் ஆட்சி; பொதுவுடைமை ஆட்சி. அதனைச் சர்வாதிகாரம் என்பது தவறு. இரஷ்யர்கள் கூட்டாக உழைக்கிறார்கள். உழைப்பின் பயனை அனுபவிக்கிறார்கள்; தம்மைத் தாமே ஆண்டு கொள்கிறார்கள். அதற்கேற்ற சமூக அமைப்பை அமைத்து அதன் வழியிலே செல்கின்றார்கள். அங்கே இரப்பாரும் இல்லை; புரப்பாரும் இல்லை; ஆண்டியும் இல்லை; ஆண்டையும் இல்லை; வயிற்றை எக்கித் திரிவோரையும் வயிற்றை உப்ப வைத்துத் திரிவோரையும் காண முடியாது. தன்னலம் பேணாமல் பொது நலம் பேணி உயர்கின்றது நாடு. இப்படி ஒரு நாடு இருந்தால் அதுவே ஒரு பூலோக சுவர்க்கம் என்பதற்கு ஐயமென்ன?"

இதேபோல், பாரதியின் சமகாலக் கவிஞரும், பல நூல்களைக் எழுதிக் குவித்தவருமான யோகி சுத்தானந்த பாரதி பாண்டிச்சேரி அரவிந்த ஆசிரமத்தில் பல்லாண்டுக் காலத் துறவு வாழ்க்கையை மேற்கொண்டு விட்டு, ஐம்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் அந்த ஆசிரமத்தை விடுத்து வெளியேறி வந்த பின்னர், ஐம்பதாம் ஆண்டுகளின் மத்தியில், சோவியத் யூனியனுக்குச் சென்ற ஒரு கலாசாரப் பிரதிநிதிக் குழுவில் தாமும் ஒருவராகப் போய் வந்தார். இந்தப்

பயணத்தின் போது அவர் அக்டோபர் புரட்சியின் சாதனைகளை நேரில் கண்ணாரக் காணும் வாய்ப்பினைப் பெற்றார். அந்தச் சாதனைகள் அவர் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. இதன் பயனாக, அவர் சோவியத் யூனியனிலிருந்து திரும்பி வந்த பின்னர், சோவியத் யூனியனையும் அதன் சாதனைகளையும் பற்றிப் பல பாடல்கள் எழுதினார். இவை ''சோவியத் கீதாஞ்சலி'', ''லெனின்-காந்தி'' என்ற தலைப்புக்களில் அவர் வெளியிட்ட இரு கவிதைத் தொகுப்புக்களாகப் பின்னர் வெளி வந்தன.

அக்டோபர் புரட்சியின், அதன் லட்சியங்களின் செல்வாக்கு, காலப்போக்கில் சோவியத் யூனியன் சாதித்துக் காட்டிய சாதனைகள், யுத்தப் பிற்கால ஆண்டுகளில் வளர்ந்தோங்கிய அதன் சர்வதேச கௌரவம், சர்வதேச ஸ்தானம், நட்புறவையும் சமாதானத்தையும் போற்றிவரும் அதன் உறுதியான கொள்கை, தேச விடுதலைப் போராட்டங்களுக்கு அது அளித்துவரும் தங்கு தடையற்ற ஆதரவு, இளம் சுதந்திர நாடுகளின்பால் அது கொண்டுள்ள தன்னலமற்ற நட்புறவு—ஆகிய இவை யாவும், குறிப்பாக ஐம்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்திலிருந்தே பல தமிழ் எழுத்தாளர்களின் உள்ளங்களைக் கவர்ந்து அவர்களது படைப்புகளில் பிரதிபலித்து வரத் தொடங்கின. இது விஷயத்தில், அத்தகைய எழுத்தாளர்களையும் அவர்களது படைப்புக்களையும்அறிமுகப்படுத்துவதிலும், வளர்ப்பதிலும், பிரபலப்படுத்துவதிலும் சாந்தி, சரஸ்வதி, தாமரை ஆகிய கலை இலக்கிய சஞ்சிகைகள் பெரும் பங்கு வகித்து வந்தன.

இதன் பயனாக, நாவல் இலக்கியத் துறையில் ஏ. எஸ். கே. யின் தங்கம்மா, ஆ. பழனியப்பனின் வெளியேறிய தெய்வம், பொன்னீலனின் கரிசல் மற்றும் சில நாவல்களும், சிறு கதைத் துறையில் கு. அழகிரிசாமி, ஜெயகாந்தன், காலஞ்சென்ற விந்தன் மற்றும் ஏராளமான இளம் எழுத்தாளர்களின் சிறு கதைகளும், கவிதைத் துறையில் காலஞ்சென்ற 'தமிழ் ஒளி', குயிலன், கே. சி. எஸ். அருணாசலம், சிற்பி பாலசுப்ரமணியன், மீ. ராஜேந்திரன் (மீரா) மற்றும்

பலரது கவிதை நூல்களும், பாடல் துறையில் காலஞ்சென்ற பிரபல திரைப்படப் பாடலாசிரியர் பட்டுக் கோட்டை கல்யாண சுந்தரம், காலஞ்சென்ற வெ. நா. திருமூர்த்தி ஆகியோரும், மற்றும் சிலரும் படைத்த படைப்புக்களும், இலக்கிய விமர்சனத் துறையில் நா. வானமாமலை, ஆர். கே. கண்ணன் மற்றும் சிலரது விமர்சனப் படைப்புக்களும் ஆராய்ச்சி நூல்களும், இந்த எழுத்தாளர்களின் சிந்தனையில் அக்டோபர் புரட்சியின் லட்சியங்கள் செலுத்தியுள்ள செல்வாக்கையும், சோவியத் இலக்கியங்கள் இவர்களைக் கவர்ந்துள்ள வலிமையையும், சோவியத் இலக்கிய மேதைகளிடமிருந்து இவர்கள் சுவீகரித்துக் கொண்ட இலக்கியக் கண்ணோட்டத்தையும், அணுகல் முறையையும் நன்கு பிரதிபலிப்பவையாக விளங்குவதைக் காணலாம். இக் கட்டுரையாசிரியரின் கதை, கவிதை, நாவல், இலக்கிய விமர்சனம் முதலிய இலக்கியப் படைப்புகள் பலவும் இந்தச் செல்வாக்குக்கு ஆட்பட்டவையேயாகும்.

சொல்லப்போனால், கடந்த இருபது ஆண்டுகளில் அக்டோபர் புரட்சி லட்சியங்களின்பால் மேலும் மேலும் பல தமிழ் எழுத்தாளர்கள் ஈர்க்கப்பட்டுள்ளனர் என்றே சொல்லலாம். இந்தச் செல்வாக்கு இன்றைய தமிழ் நாட்டைச் சேர்ந்த ஏராளமான எழுத்தாளர்கள் மத்தியில் ஒரு ''சோஷலிச அணியை'' உருவாக்கியுள்ளது என்றே கூற முடியும். குறிப்பாக, இந்தச் செல்வாக்கு இன்று பெரும்பாலும் 'வசன கவிதைகள்' எழுதும் ஏராளமான இளங் கவிஞர்கள் மத்தியில் நன்கு புலப்படுகிறது. இவர்களிற் சிலர் ''வானம்பாடிகள்'' என்ற பெயரில் ஒரு கவிஞர் கோஷ்டியாகவே செயல்பட்டு வருகின்றனர். சமீபகாலத்தில் இவர்கள் ''சிநேக புஷ்பங்கள்'' என்ற தலைப்பில், சோவியத் யூனியனது சாதனைகளையும், இந்திய சோவியத் நட்புறவையும் போற்றிப் புகழும், வாழ்த்தி வரவேற்கும் தமது படைப்புக்களின் தொகுதி ஒன்றை நூல் வடிவில் வெளிக் கொணர்ந்தும் உள்ளனர்.

இறுதியாக, மாபெரும் அக்டோபர் புரட்சியின் உன்னதமான லட்சியங்களின் செல்வாக்கு தமிழ் எழுத்தாளர்களை ஆட்கொண்டு வரும் வரவேற்கத் தக்க வளர்ச்சிப் போக்கு ஆண்டுதோறும் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வருகிறது என்றே சொல்லலாம். எனவே, அத்தகைய எழுத்தாளர்கள், அவர்களது படைப்புக்கள் முதலியவற்றையெல்லாம் பட்டியல் போட்டுத் தரும் முயற்சியும்கூட, இந்தக் கட்டுரையின் எல்லையைத் தாண்டிச் செல்லும் தனிக்கட்டுரையாகப் பரிணமித்து விடக்கூடும் என்றே கருதுகிறேன்.

---

# எமது கவிதை நூல்கள்

| | | |
|---|---|---|
| தொகுப்பு: பி. இ. பாலகிருஷ்ணன் | | |
| மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள் | .. | 6-00 |
| தொகுப்பு: பேராசிரியர். நா. வானமாமலை | | |
| தமிழர் நாட்டுப் பாடல்கள் | .. | 20-00 |
| மாயகோவ்ஸ்கி | | |
| லெனின் கவிதாஞ்சலி | .. | 3-00 |
| ப. ஜீவானந்தம் | | |
| ஜீவாவின் பாடல்கள் | | 4-00 |
| த்ரு சம்பந்தம் | | |
| பெண்மையும் தியாகமும் | .. | 3-00 |
| ழ்வபாரதி | | |
| ஒரு முடிவுக்கு வாருங்கள்! | .. | 3-00 |

அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும் 1.00